வேர்க்குரு
தாக்கும்போது...

ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஒன்றுதான், அதன் ஒப்பற்ற 3-வழிச் செயலால் வியர்க்குருவை தடுக்கிறது, முறியடிக்கிறது.

OBM-2516/TM

ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஒன்றில் தான், சிறப்பான பெற்ற மருந்துக் கலவை அடங்கியுள்ளது—அது, மூன்று தீவிரமான வழிகளில் செயல் படுகிறது.

- **தடுத்தல்**

  இதன் பாக்டீரியோஸ்டாடிக் செயல், பாக்டீரியா கிருமிகள் பெருகுவதை தடுக்கிறது.

- **நிவாரணம்**

  சுகந்த மணமுள்ள ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர், வியர்வையை உறிஞ்சுகிறது. இதமளித்து விரைவான நிவாரணம் தருகிறது.

- **செயல்**

  ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஒப்பற்ற கெரட்டோலிடிக் செயல் உள்ளது: அது, பாதிக்கப்பட்ட சருமத்தை விரைவாக மாசு மருவற்றதாக்குகிறது.






குடும்பம் முழுவதற்குமான பாதுகாப்பு

Johnson & Johnson

ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர்- வேர்க்குருவிலிருந்து உங்களுக்கு சிறந்த பாதுகாப்பு.




மறுபடியும் 'பூவிலங்கு' அமீர்ஜான்.

எனவே, மறுபடியும் காலேஜ். மறுபடியும் மாணவர் கொட்டம். மறுபடியும் காதல். மறுபடியும் மோதல். இருந்தாலும் கூட...

சில வித்தியாசங்கள் உண்டு. முதல் பாதியில் அந்த அப்பளக் கட்டு, நடு வகிடு, வட்டமான ஃப்ரேம் போட்ட கண்ணாடி- அடேடே நம்ப மோகனா இது?

சாதனா — அறிமுகக் கதாநாயகி. கொஞ்சம் கன்னட ஜாடை. சற்றே இயல்பு நழுவுகிற அந்தக் குறுகுறுப்பு ஒரு ப்ளஸ் பாயிண்ட்.

நரேஷ்குமார் படத்தின் இன்னொரு முக்கிய நாயகன். ஆடல், பாடல், கூடல், ஊடல், கோபம், தாபம்— எல்லாம் இவருக்கும் கலபமான நண்பர்கள்.

நாயகனும், நாயகியும் காதலிக்கிறார்கள். சரி. அவளுக்கு விழா எடுக்க (தூரிகை பிடித்து ஓவியம் தீட்டுகிற திறமைசாலி நம் நாயகி) அவன் முனைகிற போது அவள் வராததால் கோபம் கொள்கிறான். சரி. ஊடல் நேரத்தில் அப்பாவி நாயகன் (மோகன்) கூட நாயகிஇழைகிறான் சரி. அப்புறம் ஊடல் முடிந்து காதல் ததும்புகிறது. சரி. அந்தக் காதலை நாயகனின் 'மம்மி' எதற்காகக் கூடாது என்கிறாள்? விபத்து நடக்கிற போது பிள்ளை செத்து விட்ட மாதிரி அவன் முகத்தையே துணியால் மூடுகிற வரைக்கும் போய் — பொய் சொல்லி நாயகியை ஏமாற்றுகிற அளவுக்கு அந்தக் காதலில் அவளுக்கு எதிர்ப்பு இருப்பது எதற்காக, டைரக்டர் சார்? ஏதாவது கொஞ்சம் அழுத்தமாய்க் காரணம் கொடுத்திருக்கலாமே, சௌகரியப்படவில்லையா?

இடைவேளைக்கப்புறம் வழக்கமான டிப்டாப் மோகன், மனுஷன் காதலுக்காக எத்தனை தூரம் கீழ்த்தரமாகிறார், ச்சே! நண்பனாயிருந்தவன் இறந்து விட்டதாகத் தான் நினைக்க, அவன் உயிருடன் எதிர்ப்படும் போது எங்கே தன் காதலியை மறுபடியும் தட்டிக் கொண்டு போய் விடுவானோ என்று அடுத்தடுத்து அவர் சொல்கிற பொய்களும், புரட்டுகளும் இயல்பு என்று எடுத்துக் கொள்வோம். கடைசிக் கடைசியாய் கல்யாணகட்டடத்தில் நாயகி இருக்க, மலைச்சரிவில் இரண்டு நாயகர்களும் சந்திக்கிற இடம் செம்மண் சூழலோடு நல்ல லொகேஷனாய் அமைந்து போக, 'அவள் எனக்குத்தான் சொந்தம்' என்று இரண்டு பேரும் கோலி விளையாடுகிற பையன்கள் மாதிரி சட்டையைப் பிடித்துக் கொண்டு புரளோ புரளு என்று புரள்கிறார்களே அவசியமா? மோகன் பாத்திரத்தை அவ்வளவு தூரம் இறக்கிவிட்டு வேறு வழியில்லாமல் காதலியைப் பிரிகிற கட்டாயத்தை ஒரு 'தியாகம்' என்று நீங்களே வர்ணித்து 'கார்டு' போட வேண்டுமா, டைரக்டர் சார்?

அந்த க்ளைமாக்ஸ் சண்டை, ஹம்மா, எத்தனை நீளம்! நிஜ வாழ்க்கையில் நிஜமாகவே அப்படி யாராவது அவ்வளவு நேரம் சண்டை போட்டால் பரமவீர் சக்கர விருதைக் கொஞ்சம் கூட யோசனை பண்ணாமல் எடுத்துக் கொடுக்கலாம்.

பாடல்கள் ஓஹோ ரகமுமில்லை. சேச்சே வகையுமில்லை.

ஒய். ஜி. மகேந்திரனுக்கு ஜோடியில்லை. இருந்தாலும் அமர்க்களப்படுத்துகிறார்.

கறுகறுப்பு என்றால் அமீர்ஜான். அமீர்ஜான் என்றால் கறுகறுப்பு என்கிறது படம்.

அள்ளித்தராவிட்டாலும், கிள்ளித் தரலாம்.

—ஜெயமன்மதன்



**பாவபூர்வமான சங்கீதம் வேண்டும் என்பவர்கள், பக்தி பூர்வமான இசையைக் கோருபவர்கள், கணக்கு வழக்குகளை விரும்புகிறவர்கள், விறுவிறுப்பான கச்சேரி கேட்க ஆசைப் படுகிறவர்கள் அமைதியும் சாந்தியும் எதிர்பார்ப்பவர்கள் சொல் நயத்துக்கு முக்கியத்துவம் தருபவர்கள் ஆகிய அனைத்து ரக ரசிகர்களையும் திருப்திப் படுத்தக் கூடிய இசைச்செல்வர் கே. வி. நாராயணசுவாமி.**

**இளம் துறவி**

1940-களில் ஒருநாள் வார்தா காந்தி ஆசிரமத்திலிருந்து ஏமாற்றம் தோய்ந்த முகத்துடன் வெளியேறினார் ஓர் இளைஞர். மழுங்க மொட்டை அடித்த தலை, மெலிந்த தேகம், குழப்பமும் வேதனையும் கலந்த பார்வை. காந்தி ஆசிரமத்தில் சேர்ந்து விடலாம் என்ற ஆர்வத்துடன் வந்தவரிடம், "தனி நபர் சத்தியாக்கிரகம் நடக்கும் இந்நேரத்தில் இங்கே இருப்பவர்களும் ஒவ்வொருவராய் வெளியேறிக் கொண்டிருக்கிறார்கள்; இந்தச் சமயத்தில் புதிதாக யாரையும் சேர்த்துக் கொள்வதற்கில்லை. வேண்டுமென்றால் காந்திஜியைப் பார்த்து விட்டுப் போ" என்றார்கள். காந்திஜி அன்று உடல்நலமின்றிப் படுத்திருந்ததால் எட்ட இருந்து தரிசித்துக் கொண்டு திரும்பியதோடு சரி.

அந்த இளைஞருக்கு இரட்டை ஏமாற்றம். முதலில் அவர் சங்கீதம் கற்றுக் கொள்ளலாமென்று ஆசைப்பட்டு குருகுலவாசம் செய்து தமக்குச் சங்கீதமே வராது என்று தீர்மானித்துக் கொண்டு காந்தி ஆசிரமத்தில் சேர்ந்து விடலாம் என்று புறப்பட்டு வந்திருந்தார். ஆனால் இங்கேயும் நினைத்தபடி நடக்காமல் போகவே கடைசியில் ஜபல்பூரில் அத்தான் ரங்கநாதன் வீட்டைச் சென்றடைந்தார். அவர் ஊருக்குத் தந்தி அடித்து விட்டு, தொடர்ந்து இவர் தாத்தாவுக்கு உடம்பு சரியில்லை என்று தகவல் வந்தபோது மூட்டை கட்டி இளைஞரை ஊருக்கே திரும்ப அனுப்பி விட்டார்.

இவ்வாறு ஏக்கத்துக்கும் விரக்திக்கும் ஆளாகி அலைந்து பிறகு, ஊர் திரும்பிய அந்த நபர், வேறு யாருமில்லை, இன்று மிகப் பிரபல கர்நாடக சங்கீத வித்வானாக விளங்கும் சாட்சாத் கே. வி.




✕ ஆரம்ப நாட்களில்

நாராயணசுவாமி தான்! சிறு வயதிலேயே அவருக்கு காந்தி கிருஷ்ணமூர்த்தி என்று அழைக்கப்பட்டுவந்த தேச பக்தரிடம் தொடர்பு ஏற்பட்டிருந்தது. தேச பக்தியையும் தமிழ் நூல்களைப் படிக்கும் ஆர்வத்தையும் பாரதி கவிதைகளில் ஈடுபாட்டையும் இளைஞரிடம் வளர்த்தவர் இந்த காந்தி கிருஷ்ணமூர்த்தி. எனவேதான் சங்கீதம் வராது என்று தீர்மானித்துக் கொண்ட இளைஞர் கே. வி. என்.. காந்தி ஆசிரமத்தில் சேர்ந்து தேசப்பணி ஆற்றலாம் என்கிற நம்பிக்கையுடன் போய்ச் சேர்ந்தார். அதுவும் நிராசையாகி ஊர் திரும்பியவர், குருநாதர் அரியக்குடி ராமானுஜ அய்யங்காரிடம் மறுபடியும் போய்ச் சேர்ந்தார்.

**மூன்று குருநாதர்கள்:**

"இந்தச் சம்பவத்துக்குப் பிறகுதான் என் குருநாதரை நான் சரியாகப் புரிந்து கொண்டேன்" என்கிறார் கே. வி. நாராயணசுவாமி. அந்த நாளில் குருகுலவாசம் செய்ய வரும் சீடர்களை குருநாதர் 'ஆகா.' 'பேஷ்' என்றெல்லாம்! கூறித் தட்டிக் கொடுத்து உற்சாகப்படுத்த மாட்டார்கள். வீட்டுப் பணிகளை சிஷ்யர்கள் இழுத்துப் போட்டுக் கொண்டு செய்வது போல் சங்கீதத்தையும் கூடவே இருந்து தாங்களே ஆர்வமுடன் கிரகித்துக் கொள்ள வேண்டும். உட்கார வைத்துச் சொல்லிக் கொடுப்பது என்பது ஓரளவுக்குத்தான். தாம் எவ்வளவு தான் சிரமப்பட்டுப் பாடினாலும்

# இசைச் செல்வர்



குருநாதரின் ஆமோதிப்போ முகத்தில் ஒரு சிறு மகிழ்ச்சியின் அறிகுறியோ கூடக் காணாததால் ஏமாற்றமடைந்து ஓடிப்போன நாராயணசுவாமி திரும்பி வந்ததும் குருநாதர் கோபிப்பதற்குப் பதில் ''ஏண்டா நாராயணா இப்படிச் செய்வாயோ?'' என்று கேட்டு அன்பைப் பொழிவதைக் கண்டதும்தான் அவருடைய மனத்தைச் சரியாக உணர்ந்தார்.

இவ்வாறு குருநாதரைப் பற்றிப் பேசும் போது, கே.வி.என். குரல் தழுதழுக்கிறது. கண்களில் நீர் பனிக்கிறது. அரியக் குடியிடம் போய்ச் சேர்வதற்கு முன் கே.வி.என்., பாப்பா வெங்கடராமய்யாவிடமும் பாலக்

தாங்கா நன்றாகப் பாடக்கூடியவர். மிக நன்றாகச் சொல்லித் தரும் ஆற்றல் உடையவர்; தகப்பனார் கொல்லங்கோடு விசுவநாத ஐயர் சிறந்த வயலின் வித்வான். ஆனால் அவருக்கு ஒரு விசித்திரமான



மணி அய்யர்

வரவேற்பு இருக்கும். நடிப்பு என்று ஒன்று தேவைப்படுவதை ரொம்பப் பேர் யோசிக்கவேயில்லை! கே.வி. என்னையும் அப்படி ஒரு சந்தர்ப்பம் தேடிவந்தது. கண்ணப்ப நாயனார் படத்தில் பால கண்ணப்பராய்ப் பாத்திரம் ஏற்று நடித்தார். அந்தப் படம் நாலு நாட்கள் ஓடிற்று!

கே. வி. என்னிடம் இயல்பாக இருந்த இசைஞானத்துக்கு 'நீர் ஊற்றி வளர்த்தார் பாலக்காடு மணி அய்யர். அரியக்குடியிடம் போய்ச் சேருவதற்கு இவருக்குத்தகுதியை வளர்த்துத் தயார் செய்தவர் மணி அய்யர்தான். மாறி மாறி, முசிறி, அரியக்குடி கச்சேரிகளுக்கு வாசிப்பார். கச்சேரியில் பின்னோடு போய் அமர்வார் கே. வி. என்.

''லய நுணுக்கங்களைப் பற்றி ஒன்றும் அறியாதிருந்த எனக்குக் கண் திறந்தவர் மணி அய்யர்தான். கச்சேரி முடிந்து திரும்பிய பிறகு பாடகர் எந்த அளவுக்கு ராகம் பாடினார், ஸ்வரப் பிரஸ்தாரம் எப்படி நிகழ்த்தினார் என்றெல்லாம் விமர்சிப்பார். மணி அய்யரே நன்றாகப் பாடக்கூடியவர். பக்கவாத்தியக்காரர்களை எப்படியெல்லாம் பாடகர் சிறப்பாகப் பயன்படுத்திக் கொண்டு கச்சேரியைச் சோபிக்கச் செய்ய முடியும் என்பதை அவருடனிருந்த காலத்தில் தெரிந்து கொண்டேன்'' என்றார் கே. வி. என்.



அரியக்குடி

காடு மணி அய்யரிடமும் சங்கீதம் பயின்று வந்தார். ஆக, அந்நாளில் சிரமமாகக் கருதப்பட்ட பாடகரை மட்டுமின்றித் தலைசிறந்த இரு பக்க வாத்தியக்காரர்களையும் குருநாதர்களாக அடைந்தது கே. வி. என். செய்த மிகப் பெரும் பாக்கியமாகவும் அவரது வெற்றிகளுக்கு உறுதுணையாகவும் அமைந்தது.

**''வயலினைத் தொடாதே!''**

நாராயணசுவாமியின்



பாப்பா வெங்கட்ராமையா

பிடிவாதம் இருந்தது. தம் மகன் மேடையில் மையத்தை அலங்கரிக்க வேண்டும்; பக்கவாட்டில் அமரக் கூடாது என்பதில் உறுதியாக இருந்தார். எனவே 'வயலினைத் தொடக் கூடாது' என்று தடை உத்தரவு விதித்திருந்தார்!

அந்த நாளில் நல்ல குரல் வளமும் சங்கீத ஞானமும் இருந்து ஓரளவு பார்ப்பதற்கும் அழகாகஇருந்து விட்டால் சினிமா உலகில்

**வாழ்க்கையே சங்கீதம்!**

பாப்பா வெங்கட்ராமையாவிடம் சில காலம் பயிற்சி பெறச் செய்து பிறகு அரியக்குடியிடம் நாராயணசுவாமியை அழைத்துப் போனார்







மணி அய்யர். அதிகம் பேசாமல் அடக்கமாக இருக்க வேண்டும் என்பது போன்ற கட்டுப்பாடுகள் நிறையவே இருந்தாலும் ''குருகுல வாசம் செய்த நாட்கள் ஒரு பொற்காலம் தான்!'' என்கிறார் கே.வி. என். ''விழித்துக் கொண்டிருந்த ஒவ்வொரு நிமிஷமும் நாங்கள் புதிதாக ஏதாவது கற்றுக் கொண்டிருப்போம். அப்போதெல்லாம் வாழ்க்கையே சங்கீதம் தானே!''

கச்சேரிகளுக்குப் பின்னேடு போய் தம்பூரா போட்டுப் பின்பாட்டுப் பாடிப் பாடித்தான் ஆற்றலை வளர்த்துக் கொண்டார் கே. வி. என்.

''குருநாதருடன் ஒரு கச்சேரி செய்வது என்பது ஒரு வாரம் சாதகம் செய்ததற்குச் சமம்'' என்று கூறும் கே. வி. என். தொடர்ந்து, ''வாரப்பத்திரிகை உலகில் அமரர் கல்கி எப்படியோ அப்படி கர்நாடக இசைக் கச்சேரிக்கு அமரர் அரியக்குடி'' என்கிறார். ''ஒரு வாரப்பத்திரிகை என்றால் அதில் இன்னின்னது இருக்கவேண்டும். இப்படி இப்படி அவை எழுதப்பட வேண்டும் என்று வரைமுறை ஏற்படுத்தி கல்கி ஒழுங்கு படுத்திக் கொடுத்ததுபோல் அரியக்குடி கச்சேரிகளை, இந்த மாதிரி அமைத்துக் கொள்ள வேண்டும் இப்படி இப்படிப் பாட வேண்டும் என்று சீர்ப்படுத்தித் தந்தார்! இன்னும் கொஞ்சம் பாட மாட்டாரா என்று ரசிகர்கள் ஏங்கும் போது நிறுத்திக் கொள்ளச் சொல்லித் தந்தவரே அரியக்குடிதான்!''

கே. வி. என். அப்போது அரியக் குடியிடம் சேர்ந்து ஆறு மாதம் தான் ஆகியிருந்தது. திருநெல்வேலியில் ஒரு கச்சேரி. வெள்ளம் காரணமாக வயலின் வித்வான் வந்து சேரவில்லை. அய்யங்கார் தைரியமாக சபாக்காரர்களிடம் ''நாராயணன் இருக்கான் சமாளிச்கடலாம்'' என்று கூறி விட்டார். ''தனியா விட்டாப் பாடுவியா?'' என்று ஒப்புக்குக் கே.வி. என்னிடம் கேட்டு வைத்தார். இவர் தயக்கத்துடன் தலையசைக்க, அன்றுமாலை வயலின் வாசிக்கப்படவேண்டிய இடத்திலெல்லாம் கே. வி. என் பாட கச்சேரி நடந்தது!

இந்தச் சம்பவத்தைக் கே. வி. என். பூரிப்புடன் சிலரிடம் சொல்லிக்கொண்டதை அரியக்குடி ரசிக்கவில்லை. ''சங்கீதம் மட்டும் தெரிந்தால் போதாது. இங்கிதமும் தெரியணும்'' என்று எச்சரித்து வைத்தார்!

### தனிக்கச்சேரி:

கே.வி.என்.னின் முதல் தனிக் கச்சேரி, ஆனந்தாவாட்டு கிட்டப்பா கோரிக்கைக்கு இணங்கத் தஞ்சாவூர் ஜங்ஷன் பிள்ளையார் கோயிலில் விநாயக சதுர்த்தி உற்சவத்தையொட்டி நடந்தது. அன்று சிஷ்யனுக்கு குரு பக்க வாத்தியம்! பாலக்காடு மணி அய்யர் மிருதங்கம்; திருவாலங்காடு சுந்தரேசய்யர் வயலின். பிள்ளையார் சுழியுடன் ஆரம்பித்த அந்த இசை இன்று நன்கு தழைத்து வளர்ந்திருக்கிறது.

கே. வி. என்னின் பட்டின பிரவேசமும் ஒரு சுவையான நிகழ்ச்சி. மியூசிக் அகாடமியில் செம்பை தலைமை வகித்த வருஷம், மறுநாள் அரியக்குடி கச்சேரி. 'ஐயங்காருக்கு உடல்நிலை சரியில்லை, அவரால் வர இயலாது' என்று தகவல் வரவே, திரு. வே. ராகவன் 'அரியக்குடிக்குப் பதில் கே. வி. நாராயண சுவாமி பாடுவார்' என்று அறிவித்து விட்டார். அப்போது ஆர். ஆர். சபாவில் நடக்கும் அகாடமியின் இசை நிகழ்ச்சிகள். இரண்டு குருமார்களுமே பக்க வாத்தியம்! ஒரு பக்கம் பாப்பா வெங்கடராமையா; இன்னொரு

## வித்தியாசமான வித்வான்

''கே.வி.என். பற்றி....'' என்று கேட்டவுடன் உற்சாகமாய் தங்கள் அபிப்பிராயங்களைச் சொன்னார்கள் இந்த இசை உலகப் பிரமுகர்கள். கர்நாடக இசை உலகில் ஒரு வித்தியாசமான வித்துவான் கே.வி.என், என்பதை உணர முடிந்தது. இவர்கள் பாராட்டிக் கூறியவற்றில் மாதிரிக்குச் சிற்சில வரிகள்:



**டி. கே. பட்டம்மாள்:** ''தான் என்ன பாடுகிறோம் என்று தெரிந்து பாடுகிறவர் கே. வி. என். இந்த நாளில் இப்படித் தெரிந்து பாடுபவர்கள் கொண்டு வருகிறார்கள். இவரிடம் பாடாந்திர சுத்தம் இருக்கு. சுருதி லயம் பிசகவே மாட்டார். சுக பாவம்தான் இவருடைய 'ஸ்பெஷாலிடி....''



**டி. என். பார்த்தசாரதி:** ''ஒரு மஹா வித்வானிடம் குருகுலவாசம் செய்து அவருடைய ஒப்பற்ற பாணியைப் பரிபூரணமாகப் பின்பற்றி தம்முடைய இடைவிடா உழைப்பினால் அதற்கு மெருகேற்றியுள்ளார் கே. வி. என். சம்பிரதாயத்திலிருந்து சிறிதும் விலகாத இசையின் நிரந்தர வெற்றிக்குக் கே. வி. என்.னின் பாட்டே சான்று.''

பக்கம் மணி அய்யர்! இருவரிடமும் ஆசி பெற்று அரங்கேறினார் கே.வி.என். ''தைரியமா பாடு; ரெண்டு நிமிஷம் முன்னாடியே கச்சேரியை முடிச்சுக்கோ'' என்று அறிவுரை வழங்கினார் மணி அய்யர்.

அன்றைய நிகழ்ச்சி அமோகமாய் இருந்ததென்று பலர் பாராட்டினர். ''குருவின் இடத்தில் பாட இவனுக்குள்ளென்ன தைரியம்!'' என்று சிலர் தூற்றவும் செய்தனர். ஆனால் எல்லோரும் ஏகமனதாய் ஒப்புக் கொள்ளும் விஷயம், 'அன்று துவங்கி இன்று வரை நாராயணசுவாமி கச்சேரிகளின் தரம் ஒன்றை ஒன்று விஞ்சும் வண்ணம் வளர்ந்து ரசிகப் பெருமக்களை மகிழ்வித்து வருகின்றன' என்பதுதான்.

## காதல் கடிதம்!

அரியக்குடியிடம் குருகுலவாசம் செய்கையிலேயே ஒருநாள் ஸ்டாம்பு ஒட்டப்படாத ஒரு கடிதம் கே.வி.என். கைக்கு வந்துசேர்ந்தது. அது ஒரு காதல் கடிதம்! 'இது என்ன விபரீதம்' என்று எண்ணிய இவர், இதை முளையிலேயே கிள்ளி எறியக் கருதி கண்டிப்புடன் பதில் எழுதினார். அந்தப் பெண்ணோ விட்டாவில்லை. இவர் மறுப்பை ஏற்காமல் மறுபடி எழுதினாள்! காத்திருந்து, குருநாதர் தனித்திருக்கும் வேளையாகப் பார்த்து, விஷயத்தை உடைத்து, கடிதத்தையும் படித்துக் காட்டினார் கே.வி.என். உடனே அரியக்குடி இந்த விவகாரத்தில் தலையிட்டு முற்றுப் புள்ளி வைத்தார்.

பாலக்காடு மணி அய்யருக்கும் விஷயம் எட்டியது. நாராயணசாமியின் மன உறுதி கண்டு மகிழ்ந்தாலும் இனியும் தாமதிக்கலாகாது என்று கருதி அவரைப் பெண் பார்க்க அனுப்பினார். ஒரே முகூர்த்தத்தில் மணி அய்யரின் இரண்டு சிஷ்யர்களுக்குத் திருமணம் நடந்தது. பாலக்காடு ரகு, மணி அய்யரின் தங்கைப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ள நாராயணசுவாமி, மணி அய்யரின் சித்தப்பாப் பெண்ணை மணந்தார். மாலை வரவேற்பில் அரியக்குடி கச்சேரி. ரகுவும் சரி, நாராயணசுவாமியும் சரி, ஒரு நிமிஷம் கூட சோபாவில் உட்காரவில்லை! கச்சேரி முடிந்து குருநாதர் மேடையை விட்டு இறங்கிச் செல்லும் வரை மரியாதையாக நின்று கொண்டே இருந்தார்கள்! பாவம், இவர்களைக் கரம் பிடித்த பெண்களும் வேறு வழியின்றி நிற்க நேர்ந்தது!

## ஜீவனுள்ள பாட்டு:

சென்ற டிசம்பரில் அகாடமியில் கே.வி.என்னின் கச்சேரி. கோபாலகிருஷ்ண பாரதியின் 'வருகலாமோ ஐயா' பாடலைப் பாடிய போது அவையே உணர்ச்சி மிகுதியால் கனத்துவிட்டது. பல பேருடைய கண்கள் பனித்து விட்டன. ''பக்தியிலிருந்து பிரவகிக்கும் பாவத்தை சாகித்தியங்களில் புகுத்திக் கேட்பவர்களையும் எப்படி மனமுருகச் செய்கிறீர்கள்?'' என்று வினவிய போது மெல்லப் புன்னகைத்தார் கே.வி.என்.

''வரம்பு மீறாமை தான் ரொம்ப முக்கியம். பக்தியும் உணர்ச்சியும் இருந்தால் தான் பாட்டில் ஜீவன் இருக்கும். ஆனால் பாடகரே உணர்ச்சி மயமாகப் போய் விடக் கூடாது. அப்படியானால் 'வருகலாமோ'ன்னு நாங்களும் கேவி அழ வேண்டியதுதான்! அப்படி ஒரேயடியாக உணர்ச்சி வசப்பட்டுப் போகாமலிருக்க சங்கீதமே துணை நிற்கிறது! இசை நுணுக்கங்களில் கவனம் செலுத்தும் போது பக்தி உணர்ச்சி கட்டுக்குள் அடங்குகிறது. ஆக இசை பக்தியை வளர்க்கிறது; அதைக் கட்டுப்பாட்டுக்குள்ளும் வைத்திருக்கிறது! என்ன அதிசயம் பாருங்கள்'' என்று கூறும் கே.வி.என். கூடவே, ''இதெல்லாம் என் குருநாதர் கற்றுத் தந்ததுதான்'' என்கிறார் ஒரு அவசரத்துடன்!

'கே.வி.என்னைப் பேட்டி காண்கிறோமா, அரியக்குடியையா?' என்று நமக்கே சந்தேகமாகி விடுமளவுக்குக் குருநாதரைப் பற்றியே பேசுகிறார்: ''அளவான

---



**ஆர். வேணுகோபால்:** ''சுருதி சேர்ந்து பாடவே பிறந்திருக்கிறாரோ என்று நான் பலமுறை கே.வி.என்னைப் பற்றி எண்ணி வியந்திருக்கிறேன். கம்பீரமான சாரீர வளம், இதை பல வருஷங்களாக மென்மையாகப் பாதுகாத்து வருகிறார். இவர் பாட்டில் இல்லாததே இல்லை என்று சொல்லலாம். இருப்பினும் தன்னடக்கத்தின் உறைவிடமாய் விளங்குகிறார்.''



**தஞ்சாவூர் உபேந்திரன்:** ''இன்று நமது கர்நாடக இசையில் வெகுவாகக் குறைந்து கொண்டு வரும் நிரவல் அம்சத்துக்கு முக்கியத்துவம் தந்து அதில் பழைமைச் சிறப்பும் புதுமைப் பொலிவும் விளங்குமாறு பாடி வருகிறார். பக்கவாத்திய வித்வான்களின் நுணுக்கமான இறமைகளையும், உதவிகளையும் உணர்ந்து கொண்டும், புரிந்து கொண்டும் பாடும் ஆற்றல் இவருக்கு உண்டு.''

பாவம், அளவான கற்பனை, அளவான நேரத்துக்குப் பாடுவது, சுருதி சுத்தம், சொல் நயம் எல்லாம் அவர் சொல்லிக் கொடுத்தவைதாம். உதாரணமாக 'விருத்தம் பாடும் போது வார்த்தைகள் தாம் முக்கியம்; வார்த்தைகளுக்காக ராகமே தவிர, ராகத்துக்காக வார்த்தைகள் இல்லை' என்பார் அரியக்குடி.''

### நினைவில் நிற்பவை:

''எத்தனையோ கச்சேரிகள் செய்திருக்கிறீர்கள் குறிப்பிட்டுச் சொல்லும்படி ஏதாவது?'' என்று கேட்டால் கே.வி.என். கூறுகிறார்:

''எவரெஸ்ட் சிகரத்தின் மேல் கூட ஏறி நின்று விடலாம். ஆனால் கலைச் சிகரத்தில் நாம் ஏறி விட்டதாக நினைக்கும் போது அது இன்னும் உயர்ந்து வளர்ந்து விட்டிருப்பதைத் தான் காண்போம்! ஆக எந்தக் கச்சேரியை மனசுக்குத் திருப்தி அளித்ததென்று குறிப்பிடுவது?''

''நினைவில் இருக்கும் சம்பவங்களைக் கூறலாம் அல்லவா?''

''காஞ்சியில் பெரியவாள் 'கஞ்சதளாயதாக்ஷி' கீர்த்தனை பாடச் சொன்னார். அன்று ஓர் அன்பர் காமாக்ஷிக்கு ஸ்வர்ண வஸ்திரம் சாற்றியிருந்தார். 'ஸ்ரீ காஞ்சிநிவஸனே' என்ற வார்த்தையை,— காஞ்சியில் வசிப்பவளே என்றும் காஞ்சன வஸ்திரம் உடுத்தி இருப்பவளே என்றும் இரு பொருள்படும்படி, — 'ஸ்ரீ காஞ்சிநிவஸனே' எனவும் 'ஸ்ரீகாஞ்சன வஸனே' என்றும் பிரித்துப் பாடச்சொல்லிக் கேட்டு மகிழ்ந்தார்!''

### குருவாக மாறிய சீடர்:

வெளிநாடுகளுக்கு வித்வானாகவும் இசை ஆசிரியராகவும் சென்று திரும்பியுள்ள கே. வி. என்., அற்புதமாகப் பாடுவது மட்டுமின்றிச்சொல்லித் தருவதிலும் நிபுணர். ''இசைக் கல்லூரியில் உயர் வகுப்பு மாணவர்களான எங்களுக்கு கிளாஸ் முடிந்து கீழ்வகுப்பு மாணவர்களுக்குப் பாடம் ஆரம்பமாகும். நாங்கள் வீட்டுக்குப் போக மனமில்லாமல் பின் வரிசையில் அமர்ந்து கே. வி. என். பாட்டு சொல்லித் தருவதை மறுபடி கேட்டு ரசித்துக் கொண்டிருப்போம்!'' என்கிறார் இவரிடம் பயின்ற ஒரு மாணவி.

ரேடியோவில் கே.வி.என். பாடுவதைக் கேட்டு, அந்த இசையில் காதல் கொண்டு அவரிடம் பயில வேண்டும் என்ற ஆர்வத்துடன் ஹைதராபாத்திலிருந்து தகப்பனாருடன் வந்து சேர்ந்தாள் பத்மா. நாராயணசாமி தமது முதல் மனைவியை இழந்து சில காலம் சென்று பத்மா கே. வி. என்னை மணந்து கொண்டார். ஆனால் இன்னும் மாணவியாகவும் விளங்குகிறார். கணவருக்குப் பின் பாட்டும் பாடுகிறார். தனிக் கச்சேரிகளும் செய்து பிரபலமடைந்து வருகிறார்.

---

''காதலி: என்னைக் காதலிக்கறதுக்கு முன்னாடியே, உங்களுக்குக் கல்யாணம் ஆயிட்டதா?''

காதலன்: ''சத்தியமா இல்லே. உன்னைக் காதலிச்சதுக்கு அப்புறமாத் தான் எனக்குக் கல்யாணம் ஆச்சு.''

—வே. நவபால்ராஜ்.



### தனிப்பாணி:

''எனக்கென்று தனிப் பாணியாவது ஒன்றாவது? குருநாதருடைய உயரத்தை என்னால் எட்ட முடியவில்லை; அதனால் என் அளவுக்கு ஒரு பாணி அமைகிறது'' என்று வழக்கமான அடக்கத்துடன் கே.வி.என். பேசினாலும் மணி அய்யர், அரியக்குடி, பாப்பா ஆகிய மூவரது சிறப்புக்களையும் இணைத்துத் தருவதால் ஒரு தனிப்பாணி இவருக்கு அமைந்திருப்பதை ரசிகர்கள் அறிவார்கள். ''இதெல்லாம் ஜன்ம பாக்கியம்'' என்று கருதும் அவருக்கு, வீணை தனம்மாள், ஜெயம்மாள், பாலசரஸ்வதி, விசுவா ஆகியோரிடத்தில் உள்ள மதிப்பும் மரியாதையும் அளவிடற்கரியதாய் உள்ளது. ''எத்தனையோ தடவை 'ஜகதோதாரண' பாடியிருக்கிறேன். ஆனால் ஒருமுறை பாலா அதைப் பாடி அபிநயம் பிடித்துப் பார்த்த பிறகு தான் அந்தப் பாட்டை இதுவரை ஜீவனில்லாமல் பாடிவந்திருக்கிறோம் என்பது எனக்கே புரிந்தது! அதே போல் தான் 'கிருஷ்ணா நீ பேகனே'யும்!''

இவ்வாறு தம்மை உருவாக்கியவர்களைப் பற்றியே பேசும் கே. வி. என்., இளைஞராக இருந்தபோது கண்ட இரு கனவுகளும் இன்று நிறைவேறிவிட்டன. ஒன்று, நல்ல பாடகராக வேண்டும் என்று கருதினார், இசைச் செல்வராக விளங்குகிறார்.. தேசத் தொண்டாற்ற வேண்டும் என்று எண்ணினார், அதுவும் நிறைவேறிவிட்டது. மிக உன்னதமான தெய்வீகக் கலையாகிய கர்நாடக இசையை அப்பியசிப்பதுடன் எல்லோருக்கும் வாரி வழங்கி மகிழ்வித்து பக்தி வளர்ப்பது மிகச் சிறந்த தேசத் தொண்டு அல்லவா?

பேட்டி: தமயந்தி; சிதாரவி

மேலட்டை வண்ணப்படம்: சுபா

திட்டச் செலவு ரூ.110,000 கோடி
திட்டச் செலவினங்கள் ஏராளமாகியுள்ளதால் விலை வாசி ஏற்றத்தைத் தடுப்பது சாத்தியமில்லை!
— பிரணப் முகர்ஜி
உன் பாதுகாப்புக் கவசத்துக்குப் பணம் இல்லே! எப்படியோ சமாளி!
பிரணப்
அமெரிக்கா
ரஷ்யா
சீனா
வணக்கமுங்க!
இந்திய ராணுவத்தை அனுப்பச் சொல்றேன்!
ஜெயசாந்துகிட்ட பட்ற பாடு போதாதுன்னு உங்க கிட்ட வேற அவஸ்தை!
அவர் கிடக்கிறார்!.. நீங்க ஒத்துழையா இருங்க! அன்னை இந்திரா காப்பாத்துவார்!
கால் நடையாகவே இலங்கைக்கு வந்து நான் காப்பாத்தறேன்!
அதுதான் சரி!




# கல்கி

1984 மே 6
மலர் : 42 இதழ் : 40
ரக்தாக்ஷி சித்திரை 24




## தலைகுனிவு! தலைகுனிவு! தலைகுனிவு!

தமிழக அரசுக்குத் தலைகுனிவு ஏற்படும் விதமாகச் சமீபத்தில் இரு உயர் நீதிமன்றத் தீர்ப்புக்கள் வெளியாகியுள்ளன. முதல் தீர்ப்பு மருத்துவக் கல்லூரி அட்மிஷன் பற்றியது: நூறு மாணவர்களைப் பட்டியலிட்டு இவர்களுக்கு அனுமதி மறுக்கப்பட்டது தவறு என்றும் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும் என்றும் நீதிமன்றம் கூறியுள்ளது. அதே நேரத்தில் ஏற்கெனவே இடம் வழங்கப்பட்டுள்ள 1040 மாணவர்களுள் தகுதியற்ற நூறு பேருக்கு அனுமதி வழங்கப்பட்டிருப்பதாகவோ, அனுமதி வழங்குவதில் முறைகேடுகள் நடந்திருப்பதாகவோ உயர் நீதிமன்றம் கூறவில்லை. இதனால் சற்றுக் குழப்பம் ஏற்படுவது எதிர்பார்க்கக் கூடியதுதான். மொத்தம் 1040 இடங்களே உள்ளன எனும் போது தகுதியுள்ள 100 பேருக்கு அனுமதி மறுக்கப்பட்டிருக்கிறதெனில் தகுதியற்ற 100 பேருக்கு அனுமதி வழங்கப்பட்டிருப்பதாகத்தானே அர்த்தம் என்று வாதிடுவோரும் அப்படிக் கருதுவதற்கில்லை; வெவ்வேறு தேர்வுக் கமிட்டியினர் வெவ்வேறு விதமான முடிவுகளுக்கு வருவதில் அதிசயமொன்றுமில்லை என்று மறுத்துரைப்போரும் உள்ளனர். எனவே இந்தத் தீர்ப்பின் அடிப்படையில் அமைச்சரோ, முதல்வரோ ராஜினாமா செய்ய வேண்டும் என்ற எதிர்க்கட்சி வாதம் வலுவிழந்து போகிறது.

ஆயினும் தகுதி உடைய நூறு பேருக்கு அனுமதி மறுக்கப்பட்டது என்ற யதார்த்த நிலையும் இதனால் ஏற்பட்ட காலதாமதங்களில் இந்த நூறுபேரும் ஓராண்டுப் படிப்பை இழந்து பெருநஷ்டத்துக்கு உள்ளாகியிருக்கின்றனர் என்ற உண்மையும் தமிழக அரசின் செயல் திறனுக்கு நற்சான்று வழங்குவதாக இல்லை. மேலும் ஏற்கெனவே அனுமதிக்கப்பட்ட 1040 பேர்களும் கூட அக்டோபர் முதல் வாரத்தில்தான் கல்லூரிகளில் அடியெடுத்து வைக்க முடிந்தது என்பதை நோக்குகையில் இத்தகைய காலதாமதங்கள் ஊழலுக்கும் அதிகார துஷ்பிரயோகத்துக்கும் இடம் அளிக்காதா என்ற கேள்வி எழுகிறது. எப்படிப் பார்த்தாலும் தமிழக அரசுக்குத் தலைகுனிவுதான்.

அண்மையில் வெளியாகியுள்ள மற்றொரு தீர்ப்பு ஈரோட்டில் வீட்டு வசதி வாரிய வீடுகளை ஒதுக்குவதில் முறைகேடு நடந்திருப்பதைச் சுட்டிக் காட்டுகிறது. இந்தத் தீர்ப்பை வழங்கிய நீதிபதி சந்தேகத்துக்கிடமின்றி, நியாயக் கோட்பாடுகள் புறக்கணிக்கப்பட்டிருப்பதாகவும் அதிகார துஷ்பிரயோகம் நடந்திருப்பதாகவும் சொல்லியிருக்கிறார். இவ்வாறு நீதிபதியின் கண்டன விமர்சனத்துக்கு உள்ளாகும் உத்தரவு அன்றைய வீட்டு வசதி அமைச்சர் ராகவானந்தம் பிறப்பித்ததாகும். இந்தத் தீர்ப்புக்குப் பிறகும் அமைச்சர், பதவியில் ஒட்டிக் கொண்டிருப்பது ஜனநாயக மரபுகளுக்கு முரணானது. இந்தத் தீர்ப்பே தமிழக அரசுக்குத் தலைகுனிவென்றால் அமைச்சரின் போக்கு அதைவிடப் பெரிய தலைகுனிவு!

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

# ஓம் க்ரீம் க்ரைம்! ④

கதை: ஜெ.எஸ்.ராகவன்
சித்திரம்: செல்வம்



























சுவாமி! தாங்கள் எப்போதும் துப்பாக்கியை அணிந்திருப்பதின் காரணம்.
துப்பாக்கி சாதாரண விஷயம் அல்ல. மனித உடலே ஒரு துப்பாக்கி. அதில் மெய்ஞானம் என்கிற குண்டை அடைத்து, அறிவுக் கண் என்கிற குதிரையை அழுத்தினால் எதிர்க்கும் தீய சக்திகள் பொசுங்கிப் போகும்.


மாஜி கவர்ச்சி நடிகை
சாமி! இதெல்லாம் எனக்கு விளங்காது... என் கையால ஃபிளிட் கன் கூட தொட்டது கிடையாது.... சாமி! உங்க கிட்டே ஒண்ணு கேக்கணும்.


கேள் பெண்ணே கேள்.
எனக்குத் தெரிந்த ஒருவருக்கு நரைமுடி. சின்ன வயசிலேயே வந்துடுச்சு. நீங்கதான் உங்க மந்திரத் துப்பாக்கியாலே....


எமக்குத் தெரியும். நீ கூற வந்தது சதீஷ் என்னும் வயசுப் பிள்ளையைப் பற்றித் தானே?
சாமி! சாமி! உங்களுக்கு முக்காலமும் தெரியுமா?


ம்! நன்றாகத் தெரியும். வரும் அம்மாவாசை அன்று 'பந்த்' ஏதும் இல்லாவிட்டால் பிஸ்டல் பூஜை நடக்கும். அன்று ஒரு வாலிபனின் நரை குணமாகிறதா அல்லது ஒரு மாது புத்திர பாக்யம் பெறுகிறாளா என்று ஆண்டவன் சித்தத்தைக் கேட்டறிந்து சொல்கிறேன்.


ஸ்ரீலஸ்ரீ கை கூப்பி நிற்க சுவாமி பிஸ்டலானந்தா ஜெபிக்க ஆரம்பிக்கிறார்.
பிஸ்டல் பிஸ்டல் ஜெஜெ பிஸ்டல்! பிஸ்டல் பிஸ்டல் ஜெஜெ பிஸ்டல்! பிஸ்டல் பிஸ்டல் ஜெஜெ பிஸ்டல்!...
தொடரும்



# வட்ட மேஜை

● ''ரயில் உள்ள வரை ராஜேந்தரை'' என் உயிர் உள்ள வரை மறக்கவே முடியாது! கதாசிரியர் ''சுந்தர்' அவர்களுக்கு வாழ்த்துக்கள்!
ஈரோடு—10,
மேஜர்தாசன்.

● வண்ணக் களஞ்சியமாக கல்கி விடுமுறை மலர் வெளி வருவதை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் அதற்காக இரண்டு வாரங்களுக்கு முன்பாகவே, ''தாரக''விற்கு கோடை விடுமுறை அளிக்க வேண்டுமா?
திருச்சி—20.
ஆர். அப்துல் சலாம்.

● 8.4.84 இதழில் 'பொண்ணு புடிச்சிருக்கு'



விமர்சனத்தைப் படித்தேன். படத்தின் முடிவு அனுராதா ரமணனின் அணைப்பினை அணைத்தது என்கிறார் விமர்சகர். என், 'நித்யா நீதிபதி ஆகிறாள்' (பாவை விளக்கு—1.1.1977 'அணைப்பு'க்கு மூன்றாண்டுகள் முற்பட்டது. அப்போது அதே இதழில் பூவண்ணன் என்னும் பெயரில் ஒரு தொடர்கதை எழுதிக் கொண்டிருந்தேன். அதனால் 'எல். காந்தம்' என்னும் வேறு பெயரில் எழுதினேன். அந்தக் கதையின் முடிவே அனுராதாரமணன் கதையின் முடிவாகவும் பிறகு பொண்ணு புடிச்சிருக்கு திரைப்படக் கதையின் முடிவாகவும் அமைந்துள்ளது. என் உரிமையை நிலைநாட்டவே இதை எழுதுகிறேன்.
கோவை, பூவண்ணன்.

● ''மறைமலை நகர் மர்மங்கள்'' கட்டுரையில் (8.4.84 கல்கி இதழ்) செங்கற்பட்டு தொலைபேசி நிலைய ஊழியர்கள் பற்றி உண்மைக்குப் புறம்பான தகவல்களை மறைமலைநகர் தொழிலதிபர் ஒருவர் கூறியுள்ளார். சுமார் 100 சந்தாதாரர்களைக் கொண்ட மறைமலைநகர் தொலைபேசி நிலையத்திலிருந்து 'ட்ரங்கால்' செய்ய வேண்டுமானால் செங்கைத் தொலைபேசி நிலையத்தை '0' மூலம் தொடர்பு கொள்ள வேண்டும். ஒரு சமயத்தில் ஒரு சந்தாதாரர் மட்டுமே பேச முடியும். ஒருவர் எவ்வளவு நேரம் அந்த லைனில் இருக்கின்றாரோ அவ்வளவு நேரம் அடுத்தவர்களுக்கு லைன் கிடைக்க நியாயமான கால தாமதம் ஏற்படும். எங்கள் மீது சேற்றை வாரி இறைப்பது அழகல்ல.
செங்கை,
செயலர், வி. டி. சம்பத்.
AITEE யூனியன் Class III

## சேற்றை வாரி இறைக்கலாமா?

● நா. காமராசனின் 'ஒரு புதிய அழைப்பு' வாசகர்களுக்கு ''ஓர் இனிய விருந்து''.
கரூர்-1 ரஞ்சிதம்பெஞ்சமின்

● கண்ணீப் போக்கா கண் துடைப்பா தலையங்கம் இலங்கை அரசுக்குச் சரியான நேரத்தில் தரப்பட்டுள்ள அறிவுரை — எச்சரிக்கையும் கூட.
சென்னை—5
எஸ். சம்பத்குமார்

● மத்திய ஆளுங்கட்சியின் சார்பாக டாக்டர் சென்னிரெட்டியும் அதனுடன் கூட்டணிக்கு நிச்சயதார்த்தம் முடிக்கப்பட்ட நிலையில் உள்ள தமிழக ஆளுங்கட்சிப் பொதுச் செயலாளரும் உதிர்த்துள்ள கருத்துக்களைக் கவனமாகப் பார்த்தால் இவர்கள் எதிர்க்கட்சிகள் மாநாடு பற்றி எரிச்சலும் கிலியும் அடைந்திருப்பதாகத்தான் தென்படுகின்றது.
தஞ்சாவூர் அ. சம்பத்

● 22.4.84 கல்கி இதழில் வெளியான 'சமுத்திரத்திலிருந்து' என்ற கதையைப் படித்தேன். நல்ல கதைத் தேர்வு என்பதைக் கட்டாயம் குறிப்பிட்டே ஆக வேண்டும்.
பொறையார்.
திருமதி. சுரேஷ்குமார்.

● வாசகர் பங்கு ''சுலோகன்'' ஒவ்வொன்றும் கல்கி வாசகர்கள் அரசுக்கு எவ்விதத்திலும் சளைத்தவர்கள் அல்ல என்று நிரூபித்து விட்டது. சுலோகன்இரண்டு வரியாயினும் ''நறுக்நறுக்'' என இருந்தது!
சின்னசேலம்—1.
எம். ஏ. பாஷா

● கல்வியில் தொழிற்கல்வி பற்றிய கட்டுரையைக்கண்டதும் சமீபத்திய, தரக்குறைவான சில பாடல்கள் நினைவுக்கு வருகின்றன. வேலையில்லாத இளைஞர்களை புண்படுத்தி, 'நீங்கள் படித்ததனால் என்ன பயன்?' என்று நையாண்டி செய்தும், எருமை மாடு படிக்காமலேயே மாதம் ஆயிரம் ரூபாய் பால் தருகிறது என்று கூறியும், வேலையில்லாத பட்டதாரிகளைஎருமை மாடுகளை விடக்கேவலமாகச் சித்திரித்து வருகின்றனர். வேதனைக்குரிய விஷயம்!
ச. பிரபாகரன்
அம்மாபேட்டை.
(கடைசி கடிதம் பரிசு பெறுகிறது)



# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்




**காம்ப்ளான்®**
**ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றுடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

வளரும் குழந்தைகளுக்கென்றே சிறப்பான சில தேவைகள் உள்ளன—வளரும் வயதிலே உடம்புக்குத் தேவைப்படும் மிகச் சிறந்த புரதம், 22 மூலாதார ஊட்டச் சத்துக்கள் —அளிக்கிறது காம்ப்ளான். மறவாதீர்கள், டாக்டர்களின் சிபாரிசு பெற்ற, திட்டமிட்ட உணவு காம்ப்ளான்,

GLC-4-2012 TH

**இலவசம்!** 32 பக்கங்கள் கொண்ட கைப் புத்தகம்.

''குடும்பத்திற்கான பரிபூரண ஊட்டச் சத்துணவு வழிகாட்டி''
50 பைசா தபால்தலை இணைத்து இம் முகவரிக்கு எழுதிப் பெறுக:
தபால் பை நம்பர் 19118, (Comp) G-78, பம்பாய் 400 025.

**திட்டமிட்ட பரிபூரண உணவு — காம்ப்ளான்®**

# சொன்ன வண்ணம் செய்த பெருமான்

– ஆனந்தி

ஆய்த எழுத்தைத் தன் பெயரில் கொண்டுள்ள திருவெஃகா என்ற தலத்தின் பெயர் வெகு நாட்களாக மனத்தைக் கவர்ந்து வந்திருக்கிறது. காரணம், முதலாழ்வாரான பொய்கையார் அவதரித்த ஊர் என்ற சிறப்பு இத்தலத்துக்கு உண்டு என்பதுதவிர, சிறுமியாக இருந்த போதே கேட்ட ஒரு கதை!

திருமழிசை என்னுமூரில் பிறந்து சிவநேயச் செல்வராக விளங்கியவர் திருமழிசைப்பிரான். அவர் ஒரு சமயம் பேயாழ்வாரைச் சந்தித்தார். அன்று முதல் வைகுந்த நாதனிடம் அசைக்க முடியாத பக்தி கொண்டு தமிழ்த் தொண்டு புரிந்து வந்தார். பன்னிரு ஆழ்வார்களில் ஒருவராகப் போற்றப்படும் திருமழிசை ஆழ்வார், பற்பல சித்துக்களைச் செய்து காட்டியவர்.

ஒரு சமயம் இவர் திருவெஃகா தலத்துக்கு வந்தார். பாம்பணை மேல் பள்ளி கொண்ட பரந்தாமனைத் தரிசித்துக் கொண்டு, அங்கேயே தங்கினார். அவருக்கு மிகவும் பிரியமான கணிகண்ணன் என்ற சீடரும் அவருடனேயே இருந்து வந்தார்.

திருமழிசை ஆழ்வாரின் மீது பக்தி கொண்ட ஒரு மூதாட்டியார் அவருக்கு சேவை செய்து வந்தாள். அவளிடம் கருணை கொண்ட ஆழ்வார் அவள் கேட்டபடியே முதுமை நீங்கி இளமை பெற அருள் புரிந்தார். மனம் கவரும் அழகியாக மாறிய அவளைக் காஞ்சியில் அரசாண்டு வந்த பல்லவ மன்னன் மோகித்து மணந்து கொண்டான். அவளுடைய இளமையின் காரணத்தை அறிந்து கொண்ட மன்னனுக்கு எப்படியாவது ஆழ்வாரைத் தன் மீது ஒரு பாடலாவது பாடச் செய்து விட வேண்டுமென்று ஆசை உண்டாயிற்று.

ஆழ்வாரை நேரில் கேட்கக் கூசிய அரசன் கணிகண்ணனிடம் "உமது குருவை என் மீது ஒரு பாடல் இயற்றச் சொல்லுங்கள்" என்று கேட்டுக் கொண்டார். 'அவர் மானிடரைப் பாட மாட்டார்' என்று கணிகண்ணன் கூறவே "நீராவது என் மீது ஒரு பாடல் இயற்றித் தாரும்" என்றார் பல்லவ வேந்தர். கணிகண்ணர் மறுக்கவே அரசருக்கு ரொம்பக் கோபம் வந்து விட்டது. "என்னுடைய ராஜ்யத்திலிருந்து போய் விடும்" என்று மிரட்டி அனுப்பினார்.

கணிகண்ணர் நேரே தம் குருவிடம் வந்து அரசனுடைய உத்தரவைப்பற்றி கூறிவிட்டுக் கிளம்பினார். சீடனிடம் அளப்பரிய பிரியம் ஆழ்வாருக்கு. "சற்று இரு" என்று கூறிவிட்டு விறுவிறுவென்று கோவிலுக்குள்ளே சென்றார். வேகவதி நதிப் பிரவாகத்தைத் தடுக்கத் தாமே அணையாகப் படுத்துக் கிடந்த பெருமாளைப் பார்த்து,

"கணிகண்ணன்
போகின்றான்
காமரு பூங்கச்சி
மணிவண்ணா! நீகிடக்க
வேண்டா – துணிவுடைய
செந்நாப் புலவன்யான்
செல்கின்றேன்
நீயும் உந்தன்
பைந்நாகப் பாய்சுருட்டிக்
கொள்."

என்று எளிதாக ஒரு உத்தரவு போட்டாரே பார்க்கலாம். உடனே சேஷ சயனப் பெருமாளும் தமது நாகணையைச் சுருட்டி எடுத்துக் கொண்டு ஆழ்வார் பின்னால் கிளம்பி விட்டார். கணிகண்ணன் திகைத்து நிற்கையிலேயே திருமழிசைப்



✕ ஐந்து நிலை கோபுரம்



✕ உற்சவமூர்த்தி, ஸ்ரீதேவி, பூதேவி, கோதை நாச்சியார், சக்கரத்தாழ்வார் ... கணிகண்ணன்



✕ ஸ்ரீராமபிரான் சந்நிதி



✕ கோமளவல்லி தாயார் (கஜலக்ஷ்மி)

பிராக முன் செல்ல அவர் பின்னால் தேவதேவனை நாராயணன் செல்ல, மற்ற கோவில்களில் குடிகொண்டிருந்த மற்ற தெய்வங்கள் அனைவரும் 'இனி நமக்கு இங்கே என்ன வேலை?' என்று அவர்கள் பின்னாலேயே புறப்பட்டுச் செல்ல ஏக ரகளையாகி விட்டது.

எல்லாத் தெய்வங்களும் போய் விட்டால் நாடு நகரம் என்ன ஆகும்? களையிழந்து, சூனியமாய் பயிர் பச்சைகள் வாட, மக்கள் மனம் பதற பல்லவ வேந்திரர் கவலையில் ஆழ்ந்தார். திருமழிசையாழ்வார் போய் விட்ட படியால் தான் இப்படி ஒரு சூனியமாய்ப் போயிற்று என்பதை உணர்ந்த அரசர் ஓடிச் சென்று ஆழ்வார் பாதங்களில் பணிந்து திரும்பி வரும்படி அழைத்தார்.

கருணையே வடிவான ஆழ்வார் அரசர் சொன்னபடி உடனே புறப்பட்டார். தம்முடன் வந்து விட்ட மகாவிஷ்ணுவைப் பார்த்துப் பாடலைச் சிறிது மாற்றிப் பாடினார்.

''கணிகண்ணன்
போக்கொழிந்தான்
காமரு பூங் கச்சி
மணிவண்ணா நீகிடக்க
வேண்டும் — துணிவுடைய
செந்நாப் புலவனும் செலவு
ஒழிந்தேன்.
நீயும் உந்தன்
பைந்நாகப் பாய்விரித்துக்
கொள்.''

ஆழ்வார் கூறியதைக் கேட்ட பக்தவத்ஸலனும் திரும்பத் தன் கோவிலுக்குச் சென்று முன் போலவே அனந்த சயனக் கோலம் கொண்டார். ஆழ்வார் கூறிய வண்ணமெல்லாம் செய்த பெருமானுக்குச் ''சொன்ன வண்ணம்செய்த பெருமாள்'' என்ற பெயர் நிலைத்து விட்டது.

அந்தக் காலத்தில்காஞ்சிபுரம் மரங்களும், சோலைகளுமாக இருந்திருக்கவேண்டும். இன்று சின்னக்காஞ்சிபுரத்தைப் பார்த்தால்வேகவதி நதியும் பூஞ்சோலைகளும் எங்கே போய்விட்டன என்று வியப்பாயிருக்கிறது. திருவெஃகாவைத் தேடிக் கொண்டு காலை பத்து மணியளவில் தேரடிக் கருகில் அலைகிறோம். வழி சொன்னவர்கள் சொன்ன படியெல்லாம் திரும்பித் திரும்பிச் சென்று ஒரு கோவிலைக் காண்கிறோம். நடை சாத்தியாகி விட்டது. ஏமாற்றத்துடன் விசாரித்தால் ''இதுஅஷ்டபுஜபெருமான் கோவில். நீங்கள் கேட்கிற கோவில் அந்தப் பக்கம் இருக்கு'' என்று ஒருவர் கைகாட்டுகிறார். கடையில் திருவெஃகா தலத்தைக் கண்டுபிடித்தே விட்டோம். ஆனால் என்ன பிரயோஜனம்? கதவுகள் அடைத்திருக்கின்றன. கோவில் வாசலில் அமர்ந்திருக்கும் ஒருவர் ''கோவில் பாஷ்யம் ஐயங்கார் வீடு கிட்டத்தான் இருக்கிறது. கூட்டி வந்தால் பார்க்கலாம்'' என்று கூறினார். உடனே ஸ்ரீ பாஷ்யம் ஐயங்கார் வீட்டைத்தேடிப் போனோம். வாசல் திண்ணையிலேயே அமர்ந்திருந்த முதியவர் ''உடனே தரிசனம் பண்ண வேண்டுமா? இதோ உடனே வருகிறேனே'' என்று கூறிவிட்டுச் சாவியை எடுத்துக் கொண்டு வந்தார். பெருமானுடைய குணம் இவருக்கும் இருப்பதைக் கண்டு வியப்பில் ஆழ்ந்தேன். தரிசனம் பண்ணி வைக்கவேண்டும் என்ற ஆவலும், எளிமையான தோற்றமும், இனிமையான சொல்லும் உடைய ஸ்ரீ பாஷ்யம் ஐயங்கார் பண்பாட்டின் உறைவிடமாக இருக்கிறார். சாவியை எடுத்துக்கொண்டு கூடவே வந்தார்.

ஐந்து நிலை கொண்ட கோபுரம். உள்ளே கொடி மரத்தைக் காணவில்லை. ஒரு தூண் மட்டும் நிற்கிறது. உள்ளே சென்று கதவுகளைத் திறந்து ''வாருங்கள்'' என்று கனிவுடன் அழைத்துத் திருவிளக்கேற்றித் தரிசனம் செய்து வைக்கிறார்.

சுவாமி புஜங்க சயனராக நீளநெடுக சயனித்

✕ ஆழ்வார்கள்



இருக்கிறார். சாதாரணமாக திருமுக மண்டலம் மேலே நோக்குவது போல இருக்கும். இங்கே பரந்தாமன் முகம் நம்மை நோக்கித் திரும்பியவாறு நம்மைப் பார்ப்பது போல் தோன்றுகிறது. நாம் என்ன சொல்லப் போகிறோம் என்று காத்திருக்கிறாரோ? கரண்டி விளக்கின் திரியைத் தூண்டி விட்டதும் பெருமாளின் முக மண்டலம் நன்றாகத் தெரிகிறது. நாபி கமலத்தில் பிரும்மாவைக் காணவில்லை. வலது கரம் உயர்ந்தும் இடது கரம் சிரத்துக்கு அருகிலும் காணப்படுகின்றன. அழகிய தமிழில் ஒரு கதை சொல்லுகிறார் ஸ்ரீ பாஷ்யம் ஐயங்கார்.

ஒரு சமயம் பிரும்ம தேவர் விச்வஜித் என்ற யாகத்தைச் செய்யத் தொடங்கினார். இந்த யாகத்தினால் ஸ்ரீமந் நாராயணனை மகிழ்வித்து உலக முழுவதற்கும் அருள் மாரி பெய்விக்க வேண்டும் என்பது அவர் நோக்கம். ஆனால் தம் பத்தினியாகிய ஸரஸ்வதிக்குச் சொல்லாமல் இந்த யாகத்தைச் செய்தார். இதைத் தெரிந்து கொண்ட கலைவாணி மிகவும் கோபமடைந்தாள். யாகத்தைத் தடுக்கவேண்டுமென்ற எண்ணத்துடன் வேகவதி நதியாகப்பெருகிப் பெரிய சுழல்களுடன் வழியிலிருந்தவற்றையெல்லாம் அடித்துப் புரட்டிக் கொண்டு பாய்ந்து வந்தாள். அந்த வேகத்தைக் கண்ட தேவர்கள் திகைத்து. திருமாலிடம் பிரார்த்தனை செய்தார்கள். உடனே அவர் யாக சாலையை வெள்ளம் அடையுமுன்பாக வெள்ளத்துக்குக் குறுக்கே அணையாகப் படுத்துக் கொண்டு விட்டார். வேகம் தணிந்து கலைவாணி தன் சினமும் தணிந்து நாராயணனை வணங்கினாள். பகவான் பிரும்மாவிடம் ''உலக மக்களுக்கெல்லாம் வாக்காக இருப்பவள் ஸரஸ்வதி. அவளே எல்லோரையும் விடச் சிறந்தவள்'' என்று கூறியருளினார்.

இந்தக் கதையைக் கூறி விட்டுத் திருவடி தரிசனம் செய்து வைக்கிறார். வலது பாதம் உயர்ந்து நீரைத் தடுக்கும் பாவனை. இடது பாதம் சாய்ந்திருக்கிறது. பாத தாமரைகளுக்கருகே அமர்ந்திருக்கும் ஸரஸ்வதி தேவியைத் தரிசிக்கிறோம். மாமனாரையும், மருமகளையும் ஒருங்கே தரிசித்து ஞானமும் கல்வியும் அருளும்படி வேண்டிக்கொள்கிறோம். மாமனார் மெச்சிய மருமகள்.

கோமள வல்லித்தாயார் சந்நிதி. பச்சைப் பசேலென்று பட்டாடை அணிந்து குண்டு குண்டாய்ப் பவழ மாலையும், திருமாங்கல்யமும் திகழ, நெற்றியில் வைரமிழைத்த பட்டை ஜொலிக்க இருபுறமும் கஜங்கள் பூஜிக்க, கரங்களில் மலர்ந்த தாமரைகளை ஏந்தி கஜலக்ஷ்மியாகத் தாயார் அமர்ந்திருக்கும் கோலம். திவ்ய மங்கள வடிவம். நெடுநேரம் நின்று தரிசனம் செய்கிறோம்.

ஸ்ரீ பாஷ்யம் ஐயங்கார் சந்நிதியைப் பூட்டிக் கொண்டே, ''ஸ்ரீ ராம பிரானையும் தரிசித்து விடுங்கள்'' என்று கூறி விட்டு இன்னொரு இடத்தில் கதவைத் திறக்கிறார்.

கிரீட குண்டலங்களும், பட்டுப் பீதாம்பரங்களும் அணிந்து சக்கரவர்த்தியாகக் கையில் தாங்கிய கோதண்டத்துடனும் முகத்தில் தவழும் புன்னகையுடனும், காணப்படும் ஸ்ரீராமனைத் தரிசனம் செய்கிறோம். சீதாப்பிராட்டியார் மணப்பெண்ணைப் போல் காட்சி தருகிறார். ஸர்வாலங்கார பூஷிதையாக இந்தத் தேவியை வடித்த சிற்பி

''உழுகின்ற கொழுமுகத்தில்
உதிக்கின்ற கதிரின் ஒளி''

யாகக் கண்ட ஜனக மகாராஜனைப் போல் மகிழ்ந்திருக்க வேண்டும்.

ஹனுமானோ தன் உருவத்தைச் சுருக்கிக்கொண்டு அடக்கமே உருவாக அன்னை ஜானகியின் எதிரே நிற்கிறார்.

நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதியில் தாயாரின் பெயர் கச்சிஇலக்குமி என்று காணப்படுகிறது. திருவெஃகா என்று பெயர் உண்டானதற்குப் பின்னைப் பெருமாள் ஐயங்கார் ஸ்வாமிகள் விளக்கம் தருகிறார். ''வேகவதி நதியைத் தடுத்த காரணத்தால்பெருமாளுக்கே வேகவணைஎன்று பெயராயிற்று. அதுவே வேகணை, வெகாகணை, வெஃகா எனவாயிற்று'' என்கிறார். ஊரின் பெயர் மாறினால் என்ன? இறைவன் அருள் என்றும் மாறுவதில்லை. நாம் மனமுருகி வேண்டுவனவற்றை நிறைவேற்றித் தர நேற்றும், இன்றும் என்றும் காத்திருக்கிறார் ''சொன்ன வண்ணம் செய்த பெருமாள்.''

---

## லட்டு ஜிலேபிக்கு வரி!

எர்ணாகுளத்தில் உள்ள பேக்கரி அதிபர்கள் ஒன்று சேர்ந்து கோர்ட்டில் ஒரு வழக்குத் தொடர்ந்தார்கள். 'ஓட்டல்களில் லட்டு, ஜிலேபிகளை விற்பனை செய்தால் அதற்கு விற்பனை வரி கிடையாது. ஆனால் அதே லட்டு ஜிலேபிகளை நாங்கள் எங்கள் பேக்கரியில் வைத்து விற்பனை செய்தால் வரி உள்ளது. இந்த வரியை ரத்து செய்ய வேண்டும்' என்பது இவர்கள் வழக்கு.

கோர்ட்டு இப்படி தீர்ப்புக் கூறியது: ''ஓட்டலில் லட்டு அல்லது ஜிலேபியை வாங்கி அங்கேயே சாப்பிடுவதற்கும் பேக்கரிகளில் லட்டு ஜிலேபிகளைப் பார்சல் ஆக வாங்கிச் செல்வதற்கும் வித்தியாசம் உண்டு. எனவே விற்பனை வரியை ரத்து செய்ய முடியாது!''

-எஸ்.எஸ். மணி.



# இலவச அன்பளிப்பு!

## கண்கவர் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஸ்பூன்




# க்ளூகோன்-டி ® தரும் உடனடி சக்தியுடன்

உடனடி சக்திதரும் உமது தினசரி பானம். அதனைக் கலந்து அருந்திட பளிச்சென ஒரு வழி

இந்த மின்னும் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஸ்பூன். 400 கிராம் க்ளூகோன்-டி உறை வாங்கினால் இலவசம். க்ளூகோன்-டி புத்துணர்ச்சிதரும். குளுமையூட்டும். சக்திதரும்.

வைட்டமின் D, கால்ஷியம், ஃபாஸ்ஃபரஸ் ஆகியன செறிந்தது. பழரசம், பால், தேநீர் காப்பி, தண்ணீர் இவற்றிலே கலந்தோ, நேரடியாகவோ அருந்தலாம்.

சிறப்பு அன்பளிப்பாக நாமளிக்கும் ஸ்பூனை மட்டும் பயன்படுத்தத் தவறாதீர்கள் !

HTB-GLL-9686



இச் சலுகைபற்றி 400 கிராம் உறைமேல் காண்க.




வரம்புக்குட்பட்ட இருப்பு; குறிப்பிட்ட விற்பனைத் தலங்களில் மட்டுமே கிடைக்கும்.

உடனடி சக்தி பெற—க்ளூகோன்-டி ®

உடல்நலத்தின் உறைவிடம் கிளாக்ஸோ

# மூலக் கனல்

நா.பார்த்தசாரதி

## அத்தியாயம் 4

பொன்னுச்சாமியும் உடன் வந்திருந்தவரும் புறப்பட்டுப் போனபின் மறுபடி சண்பகம் திரும்ப வந்து தனிமையில் தன்னிடம் தெரிவித்த விஷயங்களைக் கேட்டுத் திருமலை யோசனையிலாழ்ந்தான். ஓரிரு விநாடிகள் சண்பகத்துக்கு என்ன பதில் சொல்வதென்றே அவனுக்குப் புரியவில்லை.

''என்ன இருந்தாலும் இது உங்க குடும்ப விவகாரம்! நான் வந்து தலையிடறது நல்லா இருக்குமா? உங்க ஐயா அதை எப்பிடி எடுத்துக்குவாரோ?''

''எப்பிடித் தலையிடறது யார் தலையிடறதுன்னு எனக்கொண்ணும் புரியலே ... வெக்கத்தை விட்டு உங்களைத் தேடி வந்ததுக்குக் காரணம நீங்க எதினாச்சும் பண்ணித் தடுக்க முடியும்னுதான்..''

''அதெல்லாம் சரிதான் சண்பகம்! ஏற்கெனவே எம் பேருலே பண்டாரத்துக்கு நல்லபிப்ராயமில்லே.. இதை வேற நான் தேடிப் போய்ச் சொன்னு என்னைப் பத்தித் தாறுமாறு நெனைக்க மாட்டாரா?''

''ஐயா உடம்புக்குச் சுகமில்லாமப்படுத்து ரெண்டு வாரமாச்சு.... அதைப் பார்த்து விசாரிக்க அந்த மாதிரி வாங்க.. தோதுப் பட்டால் அந்த விஷயத்தைப் பேசுங்க .. இல்லாட்டி சும்மா விசாரிச்சுட்டுத் திரும்பிடுங்க.''

''நீ சொல்றபடியே செய்யலாம். கடையை அடைச்சுப் போட்டு நந்தவனத்துப் பக்கம் வரேன். உங்கப்பா கிட்டப் பேசாமலே. இதைத் தடுக்க முடியுமான்னும் நான் யோசிக்கிறேன் சண்பகம்...''

அவள் தயங்கித் தயங்கி நின்று விட்டுப் புறப்பட்டுப் போனாள். போகும்போது கண் கலங்கியிருந்தது தெரிந்தது. இன்னும் சிறிது நேரம் இருந்தால் அழுது கூட இருப்பாள். வெளிப் பட்டணத்திலிருந்து இருக்காறுமைல் தொலைவிலிருந்த மறவநத்தம் கிராமத்தில் மற்றொரு பண்டாரத்தின் குடும்பம் இருந்தது. அந்தக் குடும்பத்துப் பையன் ஒருவனுக்குச் சண்பகத்தைக் கட்டிக் கொடுப்பதென்று முத்துப் பண்டாரம் ஏற்பாடு செய்திருந்தாராம். பையன் குடிகாரன், பல பெண்களோடு தொடர்புள்ள விடலை என்றெல்லாம் கேள்விப்பட்டுச் சண்பகம் பதறினாள். அவளுக்கு அந்த இடம் பிடிக்கவில்லை. அம்மாவை விட்டு முத்துப் பண்டாரத்திடம் மறுத்துப் பார்த்தாள். ''கலியாணத்துக்கு முந்தி எல்லாப் பயல்களும் அப்படித்தான் இருப்பாங்க! சண்பகத்தைக் கட்டிக் குடுத்திட்டா எல்லாம் சரியாய்ப் போயிடும்'' — என்று அம்மாவுக்குப் பதில் சொல்லிவிட்டார் அப்பா. நீங்கதான் எப்படியாவது இதைத் தடுக்கணும் என்பதாகத் திருமலையிடம் வந்து இரகசியமாகவும், அந்தரங்கமாகவும் மன்றாடியிருந்தாள் சண்பகம். திருமலைக்கே அவளிடம் அந்தரங்கமான ஓர் ஆசை உண்டு. அவளுக்கும் அவன் மேல் அப்படி ஓர் ஆவல் இருக்கும் என்று தெரிகிறது. ஆனால் அதெல்லாம நடைமுறையில் ஒரு சிறிதும் சாத்தியமல்லாத காரியம என்று இருவருமே பயந்தனர். பண்டாரத்தைப்போல் பழைமையில் ஊறிய ஜாதிக் கட்டுப்பாட்டில் தீவிர பிடிப்புள்ள ஒருவர் இதற்கெல்லாம் செவி சாய்க்கவே மாட்டார் என்று இருவருமே அறிந்திருந்தனர். நேரடியாக அப்படி வந்து சொல்லாவிட்டாலும், சண்பகம் இதைத் தன்னிடம் தேடி வந்து முறையிட்டதில் ''எல்லாவற்றுக்கும் துணிந்த ஓர் இயக்கத்தில் இருக்கிறீர்களே, என்னை எங்காவது இழுத்துக் கொண்டு ஓடியாவது காப்பாற்றுங்களேன்'' - என்பது போல் ஓர் உட்குறிப்பு இருக்கவே செய்தது. அவை ஒன்றும் தனக்குப புரியாதது போல் திருமலை பாமரனாக நடிக்க முயன்றான் என்றே சொல்ல வேண்டும். அவளுக்குத் தன் மேல் இருக்கும் எல்லையற்ற பிரியத்தை—ஊமைப் பிரியத்தை அவன் அறிவான். அதேபோல் தன்மேல் அவளுக்கு இருக்கும் ஊமைப பிரியத்தை அவளும் அறிவாள். ஒருவேளை இப்படிச் சொல்லவும தெரியாமல் மெல்லவும் முடியாமல் தவிக்கும் ஊமைப் பிரியங்களைத்தான் உலகில் காதல் என்று பெரியதாகப் பெயர் சூட்டிக் கொண்டாடுகிறார்களோ, என்னவோ?

நந்தவனத்தில் தலைமறைவாசம் செய்த போது அணுஅணுவாகப் பார்த்து ரசித்த அவளுடைய அழகுகளையும், அசைவுகளையும் பண்டாரம் யாரோ ஒரு புதியவனுக்குச் சொந்தமாக்கப் போகிறார் என்று நினைப்பதற்கே, திருமலைக்கு எரிச்சலாயிருந்தது. இந்த விவகாரத்தில் தனக்கு எதுவும் இல்லை என்பதுபோல் திருமலை நடிக்கத்தான் நடித்திருந்தான். அவளுக்கு இதில் என்ன இருக்கிறது, எப்படி இருக்கிறது என்பதை அந்தரங்கமாகப் புரியவைக்க விரும்பியவளைப் போல் தான் சண்பகம் அவனைத் தேடி வந்து

வெட்கத்தை விட்டு இதைச் சொல்லியிருந்தாள். அவனே ரொம்பவும் பெரிய மனிதத்தனமாக, ஒன்றுமே தெரியாதவனைப்போல், 'இது உங்க குடும்ப விவகாரம்! நான் எப்படித் தலையிட முடியும்?' என்று பதில் பேசியிருந்தான். தான் அவனை ஏமாற்றுகிறோம் என்று புரிந்து கொண்டே ஏமாற்றியிருந்தான் அவன். உடம்பிலும் மனத்திலும் எண்ணற்ற அவமானப் புண்களைத் தாங்கிக் கொண்டு நந்தவனத்திற்குள் அலை கழிந்து கிடந்த காலங்களில் சண்பகத்தின் புன்னகையும் பார்வையுமே அவனை ஆற்றிக் குணப்படுத்தியிருந்தது. ஒரு புருஷனுக்கு அவனுடைய பத்தினி செய்ய முடிந்ததை விடவும் அதிக சிரத்தையோடு அவள் அவனை உபசரித்திருந்தாள். பிரியத்தில் நனைந்து மூழ்கச் செய்திருந்தாள்.

இப்போது அவள் திருப்திக்காகவும், தன் திருப்திக்காகவும் அவளை இழுத்துக் கொண்டு ஓடிப் போய் விடலாம் தான். கதையில் பிருதிவிராஜ் சம்யுக்தையைக் கடத்திக் கொண்டு போனதை வியக்கும் ஒரு தேசத்தில் தகப்பன் பெயர் தெரியாதவன் என்று ஊரார் இழிவாகப் பேசும் திருமலைராஜன் பண்டாரத்தின் மகள் சண்பகத்தைக் கடத்திப் போவதை அத்தனை தூரம் வியந்து கொண்டாடி விட மாட்டார்கள். திட்டுவார்கள். தூற்றுவார்கள். ஆனாலும் அவன் ஒரு கோழையைப் போல அவளைக் கடத்திச் செல்ல முயலப் போவதில்லை. எவ்வளவு பெரிய காரியத்தைச் செய்தாலும் அதை அந்த ஊரிலே அதே தெருவிலிருந்து கொண்டே பகிரங்கமாகத் தன் விரோதிகளும் அறியும்படியாகவே செய்ய விரும்பினான் திருமலை. 'ஒரு சுயமரியாதைக்காரனின் முதல் எதிரி பயம். இரண்டாவது எதிரி மலைப்பு' — என்று பொன்னுச்சாமி அடிக்கடி சொல்வதை நினைத்துக் கொண்டான் அவன்.

இரவு பத்து மணிக்கு மேல் கடையை மூடியபின் ஒரு சீப்பு மலைப்பழமும், நாலைந்து ஆரஞ்சுகளும் வாங்கிக்கொண்டு திருமலை பண்டாரத்தைப் பார்க்க நந்த



வனத்துக்குப் போனான். படுத்த படுக்கையாக இருக்க பண்டாரம் அவனை அத்தனை உற்சாகமாக எதிர்கொள்ளவில்லை. நோயும், ஏலாமையும் காரணமாக இருக்கலாம் என்று நிருமலை அதைப் பொருட்படுத்தவில்லை. சண்பகமும், பண்டாரத்தின் மகனும், மனைவியும் ஓர் ஓரமாக நின்று கொண்டிருந்தார்கள். பண்டாரத்தின் மனைவி, "இந்த மனுஷனை விதி இப்படிப் படுக்கையிலே தள்ளிடிச்சே தம்பி!" என்று அவனிடம் அழமாட்டாக் குறையாக ஆரம்பித்தாள். சண்பகத்தின் திருமணம் பற்றிப் பேச்சே எழவில்லை. சிறிது நேரம் அவர்களோடு இருந்து விட்டு வெளியேறினான் அவன். நந்தவனத்திலிருந்து வெளியேறித் தெரு முக்குக்கான வாசலை நோக்கி மரஞ்செடி கொடிகளிடையே அவன் இருளில் விரைந்து கொண்டிருந்த போது பாக்கு மரப் பகுதியில் வளையொலி கேட்டுத் திரும்பினான். குறுக்குப் பாதையில் சண்பகம் ஓடி வந்து கொண்டிருந்தாள்.

"என்னது...? இப்படிப் பண்ணிப்பிட்டீங்க?"

"எதை எப்பிடிப் பண்ணிட்டேன்...?"

"ஐயாகிட்ட ஒண்ணுமே பேசலியே?"

"நானு எதைப் பேசறது? எப்பிடிப் பேசறது? அவரு வாயைத் திறக்கலியே...? எம்மேலே ரொம்பக் கோபமா இருக்கற மாதிரியில்லே தோணுது?"

"இந்தக் கலியாணம் மட்டும் நடக்கும்னு அதுக்கு முன்னாடியே நான் அரளிவிதையை அரைச்சுப் போட்டுக்கிட்டோ, ஊமத்தங் காயைத் தின்னோ சாகறதைத் தவிர வேற வழியில்லே."

இதைக் கூறும் போது அவள் குரலில் விசும்பல் ஒலிக்கத் தொடங்கியிருந்தது. பதில் எதுவும் கூறாமல் ஓரிரு விநாடிகள் யோசித்த நிருமலை அருகே நெருங்கிச் சண்பகத்தின் கைகளைப் பற்றியபடி ஆறுதலாக அவளிடம் சொன்னான்:

"நீ கவலைப்படாதே சண்பகம்! உங்க ஐயாகிட்டப் பேசலேன்னாலும் மருந்துக் கடை அண்ணன் மூலமா மறவநத்தத்துக்குப் போயி எப்படியாச்சும் இந்தக் கலியாணத்தை நிறுத்திட முடியும்னு தோணுது! ஆனா இந்த விஷயம் நமக்குள்ளே பரம ரகசியமாயிருக்கணும்" —

அவளுடைய விசும்பல் நின்றது.

"இதை நிறுத்திடறதோட உங்க கடமை முடிஞ்சதா நீங்க நெனைக்கறீங்களா?"

"இல்லே! ஆனா முதல்லே இதை நிறுத்தலாம்! மத்தது கொஞ்சம் பொறுத்து யோசிக்கலாம்..."

"எத்தனை காலம்தான் யோசிச்சுக்கிட்டே இருக்கப் போறீங்க...?"

"இந்த ஊரை விட்டு ஓடிப் போயிடறதா இருந்தா யோசிக்காம உடனே எதை வேணும்பண்ணிடலாம். ஆனா, நான் இந்த ஊர்ல தொடர்ந்து இருந்து என் எதிரிங்க கண்காணச் சாதிக்க வேண்டியது நெறைய இருக்கு! யோசனைக்கு அதுதான் காரணம் சண்பகம்!" —

"சரி! செய்யுங்க. உங்களை நம்பி இந்த நந்தவனத்துக்குள்ளே ஒரு ஜீவன் தவிக்கக்

## அருள்வாக்கு

எதிலும் மிகையாகப் போகாமல் நடு நிலைமையில் இருப்பது தான் சுகம். "மிதம்" என்றால் "அளக்கப்பட்ட" "அளவறிந்த" என்று அர்த்தம். "Measured behaviour என்று சொல்லும்போதும் எதிலும் தீவிரமாகப் பறக்காமல், நிதானமாக, கவனமாகச் செய்வதைத்தானே Measured என்பது குறிக்கிறது. Measured தான் மிதம். "ஜ்யாமெட்ரி" என்கிறோமே அது "ஜ்யா—மிதி" என்ற ஸம்ஸ்கிருத வார்த்தை தான். "ஜ்யா" என்றால் பூமி. "மிதி" என்பது "மிதம்" தான் — அதாவது அளக்கிற விதிமுறை. யக்ஞத்தில் வேதிகை நிர்மாணம் முதலானதுகளுக்கு பூமியை அளப்பதிலிருந்தே "ஜ்யாமெட்ரி" உண்டாயிற்று. 'க்ஷேத்ரம்' என்றாலும் பூமிதான். அதனால்தான் இதற்கு 'க்ஷேத்ர கணிதம்' என்றும் பெயர் இருக்கிறது.

செய்கிற காரியம், பேசுகிற பேச்சு, ஸம்பாதிப்பது, செலவழிப்பது, புத்தியை ஓடவிட்டு நினைப்பது, அல்லது, சாப்பிடுவது, ட்ரெஸ் பண்ணிக்கொள்வது, பொழுது போக்கு எல்லாவற்றிலுமே, ஒவ்வொன்றிலுமே 'ஓவராகப்' போய்விடாமல், மனஸ் எதற்கும் வசப்பட்டு விடாதபடி, அளவறிந்து Measured — ஆக வைத்துக் கொள்வது தான் மிதம். எல்லாவற்றிலும் இப்படிப் பண்ணுகிற பழக்கம் வந்து விட்டால் சித்தம் ஸமநிலையில் பரம சாந்தமாக ஆவதற்கு உதவும்.

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி
சங்கராசார்ய ஸ்வாமிகள்



கிட்டிருக்குங்கறது மட்டும் ஞாபகமிருக்கட்டும்.''

—இருளில் ஒற்றையடிப் பாதைவழியேகுடிசையை நோக்கிப் போகும் அவளைக் கவனித்தபடி சிறிது நேரம் பாக்கு மரங்களின் கீழே சுகமான அந்தக் கமுகம்பாளைகள் பூத்திருக்கும் வாசனையை நுகர்ந்தபடி நின்றான் திருமலை. சண்பகத்தின் நினைவுகளும் அந்த வாசனையும் சேர்ந்தே மனசைக் கிறக்கின.

அன்றிரவு நந்தவனத்திலிருந்து அவன் தேரடிக்குத் திரும்பிப் போகவில்லை. அகாலமானாலும் பரவாயில்லை என்று மறவர் சாவடி வீதியிலிருந்த மருந்துக்கடை அண்ணன் பொன்னுச்சாமியைத் தேடிச் சென்றான். பொன்னுச்சாமி அண்ணனே அவனிடம் பலமுறை சொல்லியிருந்தார்: ''இதா பாரு தம்பி! நீ எப்ப நம்ம ஆள்னு ஆயிட்டியோ அப்பவே என் குடும்பத்திலே ஒருத்தன் மாதிரித்தான். எதினாச்சும் நல்லது கெட்டதுன்னு என்னை அவசரமாப் பார்க்கணும்னு உடனே தேடி வந்து கூப்பிடு. 'இப்ப அண்ணனைப் பார்க்கலாமா, அப்புறம் பார்க்கலாமான்னு, யோசிச்சுக்கிட்டு நிற்காதே. நீ சாமத்துக்கு வந்து எழுப்பினாலும் உனக்கு ஒரு கெடுதல்னு உடனே ஓடியாந்துடுவேன்'' —

இது அவ்வளவு அவசரமான விஷயம் இல்லையென்றாலும் அண்ணனைப் பார்த்து உடனே சொல்லிவிட வேண்டும் என்று எண்ணினான் திருமலை. நல்லவேளையாக அவன் போய்ச் சேர்ந்த போது மருந்துக் கடை அண்ணன். வாசலில் கயிற்றுக்கட்டிலில் அமர்ந்து வெற்றிலை போட்டுக்கொண்டிருந்தார். வேறு யாரும் கூட இல்லை. தனியாகத்தான் இருந்தார்.

''வாங்க தம்பி! ஏது இந்த நேரத்துக்கு? ஏதாவது அவசரமா?''

''ஒண்ணுமில்லே!... நீங்க இருந்தப்பவே அந்தப் பண்டாரத்தும் பொண்ணு கடைக்கித் தேடி வந்திருந்திச்சு... அதான் அண்ணனே பார்த்திங்களே...?''

''ஆமா! அதுக்கென்ன?''

திருமலை அவருக்குப் பக்கத்தில் அமர்ந்து தணிந்த குரலில் எல்லா விவரத்தையும் சொன்னான். பொன்னுச்சாமி கவனமாகக் கேட்டுக்கொண்டார். பின்பு உறுதி கூறினார்:

''போயி நிம்மதியாத் தூங்குங்க தம்பி! அந்த மறவநத்தத்துப் பண்டாரம் இந்த ஊர்க் திசையிலே தலைவைக்கக் கூடப்படுக்க மாட்டான். நான் பார்த்துக்கிடுதேன்..''

அவர் கூறிய வார்த்தையைக் காப்பாற்றி விட்டார். என்ன செய்தாரோ, என்ன சொன்னாரோ, மறவ நத்தத்துப் பையனுடன் சண்பகத்தின் திருமணம் கலைந்து போயிற்று. அதே அதிர்ச்சியில் இரண்டு மாதத்தில் முத்துப் பண்டாரம் காலமானார்.

முத்துப்பண்டாரம் காலமான ஓரிரு மாதங்களில் அவர் மனைவியும் காலமானாள். சண்பகம் அநாதையானாள்.

ஒருசில மாதங்களில் எழிலிருப்புக்காரர்களுக்கு அதிர்ச்சியளிக்கும் மற்றொரு காரியத்தையும் திருமலை துணிந்து செய்வதற்கு முன்வந்தான். அதற்கும் பொன்னுச்சாமி அண்ணன்தான் துணைநின்றார். (தொடரும்)

வாரத்திற்கு ஒரு முறை அந்தப் பெண்களைப் பார்க்காவிட்டால் அவனுக்கு ரத்த ஓட்டமே தடைப்பட்டாற் போலாகிவிடும்.

ஒருத்தி அனிதா. இன்னொருத்தி சுநீதா. இரண்டு பேரும் சகோதரிகள். இரட்டையர்கள். அழகு என்பதற்கு இதுவரை எத்தனை விளக்கம் படித்திருந்தாலும், அவர்களைப் பார்த்த பின் எல்லாவற்றையும் அழித்துக் கொண்டு புதிதாக எழுதிக் கொள்ளவேண்டும்.

அனிதா ஏர் இந்தியாவிலும், சுநீதா ஒரு வெளிநாட்டு கான்சலேட் ஜெனரலிலும் இருக்கிறார்கள்.

அவர்கள் மட்டும் இல்லை; பங்களாவின் மெயின் கேட்டிலிருந்து பின்புறம் காம்பவுண்டு வரை எல்லாம் சுத்தம், நேர்த்தி, கச்சிதம்.

'கேக்கில் செய்தது போலத்தான் பங்களாவே தோற்றமளிக்கும். முன்னால் பசேலென்று சம உயரத்தில் புல்வெளி, தகுந்த இடைவெளியுடன் விசிறி வாழை. நிறத்துக்கு ஒருவிதமான டேலியாக்கள்.

உள்ளே போனால் மொஸெய்க் தரை நேற்றுத்தான் பாலிஷ் போட்டது போல மினுமினுக்கும். ஒவ்வொரு திரையிலும் ஏதாவது ஒரு டிசைன், பூ வேலை என்று அழகுணர்ச்சி ததும்பி நிற்கும்.

கண்ணாடிக் கதவைத் திறந்துகொண்டு உள்ளே போனால், அந்தப் பளபளப்பான நெடிய ஹாலில், ஒரு விநாடி நீங்கள் அசந்து போகிறாற்போல ஒரு மயில்தோகை அசைந்து அசைந்து மெல்லிய அகவலோடு கருநீல வண்ணத்தோடு உங்களை நோக்கி வரும்.

அந்தப் பங்களாவில் அழகு பொலியும் தோற்றத்துக்கு, அந்த மயிலும் அதன் கலாபமும், அதன் சுதந்திரத் தன்மை படைத்த நடையும் ஒரு முத்தாய்ப்புப்போல, மகுடம் வைத்தது போல, நெற்றியில் சுடர் விடும் சுட்டி போலப் பாந்தமாய், எடுப்பாய், இழைவாய் இருக்கும்.

''இது ரொம்பக் குறும்பு அர்விந்த். எங்கே போனாலும், என் பின்னாலேயே வர்றது. பெட்ரூம் போ. அங்கே வந்து நிற்கும். கதவை மூடு. ஓரே கத்தல். பாத்ரூம் போ, அங்கேயும் நோட்டம். உள்ளே நொழைஞ்சு ஒரு இன்ஸ்பெக்ஷன். இது முன்னால நான் ஸாரி சேஞ்ச் பண்ணமுடியாது. பெட்டிகோட் கழட்ட முடியாது. ப்ளவ்ஸ் மாற்ற முடியாது. ஆம்பளை மாதிரி பாக்கும். ரொம்ப லஸ்ட்...'' என்றாள் அனிதா.

''என்னதான் சொல்லு அனி, இந்தப் பங்களாவில மூணு மயிலுங்க இருக்கு. மூணையும் பார்க்காம இருக்க முடியலே. இந்த சினிமா பீல்ட்ல ரொம்பப் பொண்ணுங்களைப் படம் எடுத்திருக்கேன். சில பேர் ரொம்பக் கவர்ச்சியா, ரொம்ப செக்ஸியா, ரொம்ப டெண்டரா இருக்காங்க. ஆனா, உங்க மாதிரி அழகோ அகஉணர்ச்சியோ யார்கிட்டேயும் பார்த்ததில்லே. உங்களுக்கு இது கிஃப்ட்டுன்னு நான்நெனைக்கறேன்.''

சகோதரிகளுக்கு சின்ன வயசிலிருந்தே ஆங்கிலப் படிப்பு. ஆங்கிலத்தின் சூழ்நிலை. அப்பா பல வெளிநாடுகளில் இந்தியத் தூதரக அலுவலகங்களில் பணிபுரிந்தவர். அந்த ஆக்கிரமிப்பு பெண்களிடம் வளர்ந்திருக்கிறது.

சில மாதங்களுக்கு முன் அர்விந்த் டிஸ்கோ நிகழ்ச்சிக்குப் போயிருந்த போது இரட்டையர்களைப் பார்த்தான். கொண்டு போன மூன்று பிலிம் சுருள்களை பயன்படுத்தி விட்டான்.

''என்ன மிஸ்டர் போட்டோகிராபர், இவ்வளோ போட்டோஸ் எடுத்தா உங்களுக்கு என்ன கிடைக்கும்? ஆல்பம் போடப் போறீங்களா?''

''என் ரூம்ல எல்லாத்தையும் ஒட்டி, மாட்டி வைக்கப் போகிறேன்...''

''அப்போ உங்க போட்டோ ஒண்ணைக் குடுங்க... நாங்களும் மாட்டி வைக்கிறோம்''

''நாளைக்குத் தர்றேன்...''

அடுத்த நாள் கொண்டு போய்க் கொடுத்தான். இருவரும் நிறைய உபசரித்தார்கள்.

''அர்விந்த்... நீங்களே ரொம்ப அழகாக இருக்கீங்க... சினிமாவுல ஆக்ட் பண்ணலாமே?''

''அதுக்கும் ட்ரை பண்ணியிருக்கேன். கெடச்சா நொழைஞ்சிடுவேன். பை தி பை ஒரு வீக்லி மாகஸின் கவர்பேஜுக்கு உங்க படம் வேணும்...''

''இப்பவேவா...''

''ம்''.



# மயிலும்

## பிரதிபா ராஜகோபாலன்

அவனுக்குச் சந்தோஷமாயிருந்தது.

அப்புறம் அடிக்கடி வந்து போகத் தொடங்கினான். அவர்களுக்கு நிறைய ஆண் நண்பர்கள் இருந்தாலும் அர்விந்த் அதிக நெருக்கத்தை ஏற்படுத்திக் கொண்டான்.

ஹோட்டல் சோழா போனார்கள். சில்வர் ஸாண்ட்ஸ் போனார்கள். வாஹினியில் ஷூட்டிங் பார்க்கப் போனார்கள். பெங்களூர் இரண்டு நாள் பிக்னிக் போனார்கள். எங்கே போனாலும் அவன் அவர்களின் அழகு உணர்ச்சியை அதிகமாக ரசித்தான். அவர்களுடன் இருப்பதை ஒரு பெருமையாகவே நினைத்துப் பெருமிதப்பட்டான்.

"அர்விந்த், சில்லி சிக்கன்னு எங்க மம்மிக்கு ரொம்பப் பிடிக்கும். ராத்திரி பன்னண்டு மணிக்குத் தட்டி எழுப்பிக் குடு. தாங்க்ஸ் எலாட்ன்னு நைட் டிரஸ் மேலேயே மடியில வெச்சுட்டே இங்கும்.." என்பாள் சுநீதா.

''எப்பப் பார்த்தாலும் உங்கம்மா வீட்டிலேயே இருக்காங்க! வெளியில போறது கிடையாதா?''

''எப்பப் பார்த்தாலும் ஃப்ரண்ட்ஸ் வந்துக்கிட்டே இருப்பாங்க. காண்ட்ராக்ட் பிரிட்ஜ், இல்லேன்னா, பில்லியர்ட்ஸ், இல்லேன்னா வீடியோன்னு டைம் பாஸ் பண்ணிட்டு இருக்கும்... பை தி பை, இன்னைக்கு சர்ப்ரைஸ் என்னன்னா, எங்க அங்கிள் லண்டன்லேர்ந்து வருது... ஏர்போர்ட்டுக்கு போயிருக்கு...''

''லண்டன் போயிருந்தாரா அவர்?''

''நோ, நோ, அவரு அங்கேயே இருக்காரு. அலிடாலியாவுல ஏரியா மானேஜர் அவரு. ஸன், ஸ்டேட்ஸ்ல யு. என். ஓ.—வுல இருக்காரு. அவரை எனக்குக் கல்யாணம் பண்ணி வைக்கணும்னு ட்ரை பண்ணறார். அதுக்குத்தான் பேச வர்றாரு...'' என்றாள் அனிதா.

''உனக்கு இஷ்டமா?''

''நாங்க லெட்டர்ஸ் எழுதுகிறோம். அவரும் பண்ணிக்கணும்னு ஆசைப்படறார். விஷ்ணுவர்த்தன் ரொம்ப ஹாண்ட்ஸம்மா இருப்பார்..''



அவர்கள் பேசிக் கொண்டிருக்கும்போதே அதன் பிம்பம் தெரிய மொஸைய்க் தரையில் நிதானமாக, அந்த மயில் வரும். அனிதாவையோ, சுநிதாவையோ சுற்றிச் சுற்றி வரும். அவர்களுக்கு முன்னால் கொஞ்சம் தோகை விரித்து நடை பயிலும். உற்சாகமாய் அகவும்.

''அனி, நீங்க அழகு. உங்க பங்களா அழகு. உங்க உடம்பு அசைவு எல்லாம் அழகு. இங்க பார்க்கற ஒவ்வொரு பொருளும் அழகு. இதையெல்லாம் விட உங்க கிட்ட இன்னும் நெருக்கம் வர என்ன காரணம்னு இந்த மயிலைப் போய் இப்படிவளர்க்கணும்னு எண்ணம் வந்தது பாரு. அத நெனச்சு நெனச்சுத்தான் என் மனசு குளிர்ந்து போகுது.''

''நீங்க நான்—வெஜிடேரியன்தானே?''

''நோ, நோ ப்யூர்லி வெஜிடேரியன்'' என்றான் அவன்.

அப்புறம் நாலைந்து நாள் அவனுக்கு ஒரு தெலுங்கு படத்தின் ஷூட்டிங் இருந்தது. நாலைந்து ஸீன்களில் தலைகாட்டுகிற டாக்டர் பாத்திரம். அந்தப் படத்தின் ஸ்டில் போட்டோகிராபரும் அவன்தான்.

---

## வீடு மாற்றம்!



ஒரு நாள், முல்லாவின் வீட்டிற்குள் ஒரு திருடன் புகுந்து, ஒன்று விடாமல் எல்லாவற்றையும் எடுத்துச் சென்று தன் வீட்டினுள் பதுக்கிக் கொண்டான்!

முல்லா, தெரு முனையிலிருந்து இதைப் பார்த்துக் கொண்டேயிருந்தார். பிறகு, அவர் மெதுவாகச் சென்று, அத்திருடன் வீட்டுத் திண்ணையில் படுத்துக் கொண்டார்.

''நீ யார்? இங்கு, ஏன் வந்து படுத்திருக்கிறாய்?'' என்று அத்திருடன் அவரை அதட்டிக் கேட்டான்.

''நாம் வீடு மாற்றிக் கொண்டோம் அல்லவா? என் வீட்டில் நீ போய்ப் படுத்துக் கொள்!'' என்றார் முல்லா.

—பானு மணாளன்.

வேலை அதிகமாய் இருந்தது.

ஒரு சாயந்திரம் குளித்துவிட்டு யார்ட்லியும் ஈவினிங் இன் பாரிஸும் மணக்க பியட்டில் நுங்கம்பாக்கம் ஏரியாவில் இருக்கும் அவர்கள் பங்களாவை நெருங்கும்போதே புல்வெளியில் பத்திருபது பேர் மேஜை நாற்காலி போட்டு ஸ்டீரியோவில் வந்த ரிப்பன்ஸ் ஆப் ப்ளூ கேட்டுக் கொண்டு விருந்து சாப்பிட்டுக் கொண்டு, இடையிடையே அனிதாவும், சுநீதாவும் அவர்கள் அம்மாவும் பந்தி விசாரிக்க, ஸீத்ரு உடையில் இருந்த அவர்கள் முன் பக்கத்தையும் பின் பக்கத்தையும் ரசித்துக் கொண்டு, ஒரு வித்தியாசமான, சந்தோஷமான சூழ்நிலையை உற்பத்தி செய்து கொண்டிருக்க...

அமைதியாய்க் காரிலிருந்து இறங்கினான். பென்ஸன் அண்ட் ஹெட்ஜஸைப் பற்ற வைத்துக் கொண்டான். தன் யாஷிகாவைக் கழுத்தில் மாலையிட்டுக் கொண்டான்.

அவனைப் பார்த்த அனிதா ஓடி வந்தாள்.

''ஹாய், அர்விந்த். நேத்து நெறைய கால்ஸ் போட்டேன். டயல் பண்ணிப் பண்ணிக் கைவலிக்குது. அவுட்டோர் ஷூட்டிங் போயிட்டியா... எனக்கும் விஷ்ணுவர்த்தனுக்கும் மாரேஜ் நிச்சயம் ஆயிடுச்சு. அது தான் சின்ன பார்ட்டி. பிஸ்கட கலர்லே ஸூட் போட்டிருக்குதே, அது தான் அங்கிள்... ஏய் சுனீ, அர்விந்துக்கு நாற்காலி போடு... ஜோன்ஸ், ப்ளேட் எடுத்து வை...''

''அப்புறம் சாப்பிடலாம். நீங்க, மம்மி எல்லாம் நாற்காலியிலே உக்காருங்க... ஒரு ஸ்டில் அடிச்சிக்கலாம். லைட்ஸ் கரெக்டா இருக்கு... ஆமா, நம்ம மயில் எங்கே.... அதையும் சேர்த்து எடுத்தா, கலர்ல நல்லா வரும்... ஜோன்ஸ் நம்ம மயிலைக் கூப்பிடப்பா...''

உடனே அனிதாவும், சுநீதாவும் வாய் விட்டுச் சிரித்தார்கள். சிரிப்பு அடங்கவேயில்லை.

''உங்க மயில் இவுங்க வயித்துல இருக்கு.. ப்ரை பண்ணி சில்லி சிக்கன் மாதிரி சில்லி பீகாக்கா சாப்பிட்டாச்சு...''

''என்ன அனி... மயிலை நிஜமாவா...?''

''பொய்யாவாச் சாப்பிட முடியும்?''

அர்விந்தின் வயிறு கலங்கி விட்டது. மயிர்க்கால்கள் சில்லென்று புருபுருவென்று நிமிர்ந்து விட்டு ஒடுங்கிவிட்டன.

அழகின் வடிவத்தை, அகவி அகவி நடை பயிலும் அந்த அலங்கார உயிர்த் தேரை, வெட்டிக் கொலை செய்து வதக்கிச் சாப்பிட்டு ஜீரணம் செய்யும் இவர்கள் மனசு ராட்சச மனசா?

'இவர்களிடமா அழகு உணர்ச்சி மிதமிஞ்சி இருப்பதாக எண்ணினேன்?'

அர்விந்த் சட்டென்று காரில் ஏறிக் கொண்டான்.

''வர்றேன் அனி...

அதற்கப்புறம் அவர்களை அவன் பார்க்கவே போகவில்லை.



17

'பிரசவ சமயத்தில் பக்கத்தில் இருப்பேன்' என்று எந்த ஒரு தைரியத்தில் உமாவுக்கு வாக்குக் கொடுத்தான் இந்த ராஜா...

பரந்தாமன் அடிபட்ட புலி போல ஒரு பக்கம் சீறிக் கொண்டிருக்கும் இந்த சமயத்தில்... அவர் அறியாமல் இந்த வீட்டுக்குள் ஒரு ஈ எறும்பு கூட நுழைய முடியாதே...

வலையல் காப்பன்றே — அவரது கூரிய பார்வை விஜியைத் துரத்தி, துரத்தி அடித்ததே...

அப்பப்பா... அந்தப் பார்வையை இன்னமும் மறக்க முடியவில்லையே அவளால்.

சின்னஞ்சிறு வயசிலிருந்து — அவரது தோள் மீது உறங்கி வளர்ந்தவளாயிற்றே இந்த விஜி...

பரந்தாமனின் ஒவ்வொரு அசைவுக்கும் அர்த்தம் தெரிந்து வைத்திருப்பவளாயிற்றே...

அப்போர்ப்பட்டவனுக்கு — தன் மாமா சொன்'னைத் தொட மாட்டார் என்பது தெரியாதா...?

அவர் ஆசைப்பட்டு ஒரு விள்ளல் ஜிலேபி துணுக்கை வாயில் வைத்துக்கொள்ளப் போனாலும், தட்டிப் பறித்து விடுவாளே அவள்.

'எங்கேயிருந்துதான் இவ கவனிப்பாளோ... காக்கா மாதிரி, கையில இருக்கறதைக் கொத்திட்டுப் போயிடுறாளே...'

பரந்தாமன், சிரித்தவாறே மீனாட்சியிடம் சொல்வார்.

'அந்த விஜியா; பாசத்தைத் தன் இலையில், ஒரு கரண்டிக்கு, இரண்டு கரண்டியாக ஊற்றினாள்...!

எங்கேயோ நெருடுவது போல உணர்ச்சி..

அவருக்குத் தெரியும்; நிச்சயமாய் விஜி, மிக மிஞ்சிய துக்கத்தில், தன் நிலை மறந்து, இந்தக் காரியத்தைச் செய்யவில்லை என்பது..

துக்கத்தில் இருந்தால் — இதழோரத்தில் மின்வெட்டும் நேரத்தில் தெளித்து மறைந்த அந்தச் சிரிப்புக்கு என்ன அர்த்தம்...?

விஜி சிரித்தால், சிணுங்கினால், சீறினால்... பரந்தாமனின் பார்வையிலிருந்து தப்பவே முடியாது...

அன்றிரவு முழுவதும், தமது அறைக்குள் அடைபட்ட புலி போல அலைந்து கொண்டேயிருந்தார் அவர்.

ராஜாவைத் தேடி — அவன் இருக்குமிடம் தெரியும் என்று சொன்னவர்களை எல்லாம் நம்பி, அவர்தான் எத்தனை அலைந்து விட்டார்...

வளைகாப்பு வைபவத்தின் போது கூட, அவரது சிந்தனை முழுக்க, ராஜாவைச் சுற்றியேதானே இருந்தது...

'அவன் வருவானோ...'

'சேச்சே... அவன் என்ன, அந்த அளவுக்கு மூளை இல்லாதவனா...'

'சொல்வதற்கில்லை... சில சமயத்துல, எதிராளிங்க கண்ணுல மண்ணைத் தூவிட்டு, செய்யக் கூடாத காரியத்தைச் செய்யறதுல அவனுக்கு ஏகப்பட்ட குஷி உண்டு...'

பரந்தாமன் வேண்டுமென்றே - தான், தம் வீட்டு வாசலில் இருந்த காவலைக் கூடப் பலப்படுத்தினார்...

''எப்ப நீங்களே இந்த கேஸ்லே முழு மூச்சா இறங்கியிருக்கீங்களோ — அதுக்கப்புறம் உங்க வீட்டுக்குப் போலீஸ் காவலே தேவையில்லே மிஸ்டர் பரந்தாமன்..''

கமிஷனர் சொன்ன போது, பரந்தாமன் அவரைப் பார்த்து அலட்சியமாகச் சிரித்தார்.

''காவல் இல்லாதப்ப அவன் என் வீட்டுக்கு வர நினைக்கலாம் .. அந்த நேரத்துல நான்மட்டும் இருந்தேன்னா — அவன் காலை கட்டித் தள்ளத் தயங்க மாட்டேன்.... ஆனா — நான் இல்லாதப்ப வந்தா... சார், சத்தியமாச் சொல்றேன், என் வீட்டுல — என் கட்சி ஒருத்தருமில்லே... பெண்டாட்டி, மருமகளுங்க, என் வீட்டு வேலைக்



காரங்க கூட ராஜாவைக் காட்டிக்கொடுக்க மாட்டாங்க... அந்த மாதிரி சமயங்கள்லே— எனக்குப் பதிலா, கருணை பார்க்காம அவனைச் சுட்டுத் தள்ளக் கூடிய போலீஸ் துணை, எனக்கு எப்பவும் வேணும்... எனக்கு உதவறவங்க – எனக்காகத் தயவு தாட்சண்யமே பாராட்டக் கூடாது... கடலாமா, கூடாதா'ன்னு யோசிக்கக் கூடாது.''

''வெரி குட்...''

அன்று கமிஷனர் வாய் விட்டுப் பாராட்டிய வார்த்தைகள்.

அப்பொழுது நெஞ்சை நிமிர்த்திக் கொண்டிருந்த பரந்தாமனுக்கு – இன்று உள்ளூரத் தவிப்பு...

இந்த இரு பெண்களின் பார்வையிலும், நடையிலும் புது அர்த்தங்கள் இருப்பது போல...

அன்று மாலையே அவர்களிருவரும்கோவிலுக்குப் போனதும், கோபுர வாசலில் இருந்த வளையல் கடையில் ஏதோ விசாரித்ததும் தெரிய வந்தபோது...

உள்ளங்கால்களில் நெருஞ்சி முட்கள் குத்தியது போலத் துடித்துப் போகிறார் அவர்...

''அந்தக் கடையில யாரை விசாரிச்சாங்க...''

''சரியாத் தெரியல்லீங்க... காலையில வந்த வளையல்காரம்மாவைத் தேடிட்டுப் போயிருப்பாங்க போல...''

எத்திராஜ், தன் யஜமானரின் முன் மிகப் பணிவாகக் கூற..

இரவு முழுவதும் நடைபயின்று கொண்டிருந்தவர் – விடிகாலை நேரத்தில் – தமது பெரிய பிரம்பு சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டு மருமகள் விஜியின் வரவுக்காகக் காத்திருக்கிறார்.

இருட்டுப் பிரியும் முன்னரே கையில் காபி டிரேயுடன் அவரை எழுப்புவது விஜியாகத் தான் இருக்கும். அந்த உரிமை, இன்று வரையில் அவளுக்குத்தான்....

எப்படித்தான் அத்தனை சீக்கிரம் எழுந்து குளிக்க முடிகிறதோ..

'பாதி ராத்திரியில எழுந்து போய்ப் பார்த்தாக் கூட, இந்தப் பொண்ணு குளிச்சு முடிச்சு, இதே மாதிரிதான் பூத்த மல்லிப்பூ போல 'கும்'முனு இருக்குமோ...'

பரந்தாமனின் நிரந்தர சந்தேகம் இது.

காலை வேளையில், நெற்றித் திலகமும், லேசாக மஞ்சள் பூசிய கன்னமுமாய், குழையக் குழையச் சிரித்தபடி அவள் நடந்து வரும் அழகே அழகு...



காப்பி டம்ளரை நீட்டியவள், மாமாவின் வழக்கமான புன்னகை இல்லாததால், கலக்கத்துடன் நிமிர்ந்து பார்க்கிறாள்...

'உடம்பு சரியில்லையா மாமா...'

அவளது கனிவான பார்வையே அவரை விசாரிக்கிறது.

அவர் காப்பியை உறிஞ்சியபடியே, அவளது கையிலிருந்த சிலேட்டை வாங்கக் கையை நீட்டுகிறார்...

அந்த ஒரு நிமிஷத்தில் நெஞ்சு 'திக்திக்' எனக் குதிக்கிறது விஜிக்கு...

அவரது விரல்கள், சிலேட்டில் மிக வேகமாக ஓடுகிறது...

''என் 'தோல் பெல்ட்'டை எடுத்து வை விஜி.''

எழுத்துக்களே அவளைச் சொடுக்கி இழுத்தாற்போல மிரள வைக்க,

விழிகளை அகல விரித்து, பரந்தாமனையே பார்க்கிறாள்.

பரந்தாமனின் தோல் பெல்ட் சரித்திரப் பிரசித்தி பெற்றது.

ராஜாவின் — சின்னஞ்சிறு ராஜாவின் — இளம் தேகத்தை ருசி பார்த்து, ருசி பார்த்து நாக்கு சிவந்து போன பெல்ட்... அது மட்டுமல்ல, போலீஸ் ஆபீஸர் என்கிற முறையில் பரந்தாமன், தம்மிடம் முரண்டுப் பிடிவாதம் பிடிக்கும் குற்றவாளிகளைப் பணிய வைக்கவும் இந்த பெல்ட்டைத்தான் உபயோகிப்பார்...

எத்தனை முறை — ராஜாவை அடிக்க விஜியை விட்டே பெல்ட்டை எடுத்து வரச் சொல்லியிருக்கிறார் பரந்தாமன்...

விஜி தயங்கியபடி பெல்ட்டைக் கொண்டு வந்து தர...

அவர் அதைப் பாசமுடன் தடவியபடி மறுபடியும் சிலேட்டை எடுத்து எழுதுகிறார்... அவர்களுக்குள் மௌனமான அந்த சம்பாஷணை தொடருகிறது:

''இந்த பெல்ட்டுக்கு கூடிய சீக்கிரம் வேலை வரப் போறது விஜி...''

''...?''

''என்ன பார்க்கறே... யார் அந்தப் புண்ணியவான்னுதானே... ராஜா தலைமறைவா இருக்க யாரெல்லாம் உதவியா இருக்காங்களோ... அவங்க யாரையும் விட மாட்டேன்...''

''இப்ப நான் சொல்லப் போறதை கவனமாகக் கேட்டுக்க விஜி... என்னை ஏமாத்த நினைக்கறவங்களை நான் சும்மா விட மாட்டேன்... 'இந்த விஷயத்தைப் பொறுத்த வரைக்கும் எனக்குப் பெத்த தாயும் ஒண்ணுதான்: தாலி கட்டின பொண்டாட்டியும் ஒண்ணுதான்; நீயாக இருந்தாலும் ஒண்ணுதான்...''

விஜி மிரட்சியுடன் பார்க்கிறாள்.

இத்தனை அதிகாலையில் குளிர் பிரியாத மார்கழி மாதத்தில் — தன் மாமாவுக்கு வியர்வை ஆறுய்ப் பெருகுவதையும் கோபத்தில் முகத்திலுள்ள தசைகள் இறுகுவதையும் பார்க்கையில்... அடி வயிற்றில் கத்தி பாய்வது போல இருக்கிறது...

இதற்குப் பின் பரந்தாமன் அவளுடன் பேசவில்லை. பெல்ட்டும் கையுமாய் ஆடும் நாற்காலியில் முன்னும் பின்னுமாய் அசைந்தபடி விட்டத்தையே வெறித்துக் கொண்டிருக்கிறார்.

காலி தம்ளருடன் கீழே இறங்கி வந்த விஜியின் நெஞ்சில் கல்லைத் தூக்கி வைத்தாற் போல இருக்கிறது..

'மாமா சந்தேகப்படுறாரா... யாரை?'

'நேத்து நடந்த சம்பவம் தெரிஞ்சிருக்குமோ...'

''நான் ஒரு முட்டாள்... கொஞ்சம்கூட யோசிக்காம மாமா இலையில பாயசத்தை ஊத்திட்டேன்...''

'ஐயோ, இனிமே ராஜா எப்படி உமாவைப் பார்க்க வர முடியும்...?'

உமாவிற்குப் பேறு காலம் நெருங்க, நெருங்க, விஜியின் கவலையும் அதிகரிக்க...

டாக்டர்கள், ஒரு உத்தேசமாய், அவளது பிரசவ காலத்தைக் கூட நிர்ணயித்துச் சொல்லி விட்டார்கள்....

விஜி இதுபற்றி அவனுக்குத் தகவல் தெரிவிக்கத் துடியாய்த் துடித்து....

ஓரிரண்டு முறை வளையல் கடைக்குப் போய் — அங்கே தொங்கிய பூட்டை துக்கம் நெஞ்சையடைக்கத் தரிசித்து...

அன்றுதான் விஜிக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைக்கிறது...

காய்கறி மார்க்கெட்டில், ஏதோ பேரம் பேசிக் கொண்டிருந்த மீனாட்சியின் பின்னால் நின்று கொண்டிருந்தவள் —

எதிர்க் கடையில் பத்து பைசாவுக்கு கொத்துமல்லி கறிவேப்பிலை வாங்கிக் கொண்டு நகர்ந்த சிறுமியை உற்றுப்பார்க்கிறாள்.

அவள்..

அன்று வளைகாப்புக்காக, ராஜாவுடன் வந்தவள்... வளையல் கார அம்மாளை ஆயா, ஆயா என்று அழைத்துச் சுற்றிக்கொண்டிருந்தவள்...

அந்தக் கணமே, விஜி, மீனாட்சியை மறந்து — அவளைப் பின் தொடர....

சிறுமி, நாலு கால் பாய்ச்சலில் கும்பலில் கலக்கிறாள்...

ஒருகணம் ஸ்தம்பித்து நின்ற விஜி, ஒரு உத்தேசமாய் சிறுமி சென்ற திசையில் வேகமாய் நடக்கிறாள். (தொடரும்)

---

நண்பன்: ஏண்டா உன் ஷர்ட்டு இப்படி நனைஞ்சு உடம்புடன் ஒட்டிக் கிட்டுப் போச்சே...

மற்றவன்: ஏ. ஸி. தியேட்டர்லே சினிமா பார்த்துட்டு இப்பத்தான் வெளியே வர்றேன்.



விசேஷ பரிசுகளுடன்

# டெபாசிட் சேகரிப்பு விழா!

(15-3-1984 முதல் 14-7-1984 வரை)

**22%** வட்டி வழங்கப்படுவதுடன்
**V.I.P. BRIEF CASE**
அன்பளிப்பும் வழங்கப்படும்.

மற்றும் மேற்படி காலத்தில் டெபாசிட் செய்பவர்கள் ஒவ்வொருவரும் விசேஷ பரிசு போட்டியில் கலந்துகொள்ளும் வாய்ப்பை பெறுவார்கள். சென்னை கிளையில் டெபாசிட்தாரர்கள் முன்னிலையில் நடைபெறும் பரிசு போட்டியில் வெற்றி பெறுபவர்களுக்கு

| முதல் பரிசு | இரண்டாவது பரிசு | மூன்றாவது பரிசு | நான்காவது பரிசு |
|---|---|---|---|
| **கலர் TV** | **குளிர் சாதனப் பெட்டி** | **வாஷிங் மெஷின்** | **பிளாக் & ஒயிட் TV** |
| (அல்லது ரூ. 10,000/- ரொக்கம்) | (அல்லது ரூ. 5000/- ரொக்கம்) | (அல்லது ரூ. 4000/- ரொக்கம்) | (அல்லது ரூ. 3000/- ரொக்கம்) |
|  |  |  |  |

**கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன**

| 1-வருடம் | 2-வருடங்கள் | 3-வருடங்கள் | 5-வருடங்கள் |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 22% |



## பாலாஜி மோட்டார் & ஜெனரல் பைனான்ஸ்

(Hire Purchase Financiers for Motor Vehicles)

சென்னை : 91, உஸ்மான் ரோடு (சிவா-விஷ்ணு கோயில் அருகில்)
தி. நகர், சென்னை-600 017 போன் : 447166, 442216

பெங்களூர் : 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்)
மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003 போன் : 366971

திருச்சி : 22, மதுரை ரோடு (முதல் மாடி) திருச்சிராப்பள்ளி-620 008

பாண்டிச்சேரி : 11, நேரு தெரு (கனரா வங்கி எதிரில்) பாண்டிச்சேரி-605 001

தஞ்சாவூர் : எண் : 2 & 3, முதல் மாடி, தி. ஏ. கனம் ரோடு,
தஞ்சாவூர்-613 100 போன் : 1626

திருவண்ணாமலை : 14/A, ஆநிரைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601 போன் : 483

பட்டுக்கோட்டை : 9-A, தலையாரி தெரு, பட்டுக்கோட்டை-614 601 போன் : 453

---

**டெபாசிட்தாரர்களை அறிமுகம் செய்பவர்களுக்கும் அன்பளிப்பு வழங்கப்படும்.**



உத்ரா எடுத்த ஒரு வண்ணப்படத்தை பிரசுரித்து, 'ஊஞ்சலையும் அதை அலங்கரிக்கும் நங்கையையும் நயமாக இணைத்துக் கவிதை புனையுங்கள்' என்று சொன்னாலும் சொன்னோம், வாசகர்கள் தங்கள் கற்பனைத் திறத்தால் எங்களைத் திணற அடித்து விட்டார்கள். வந்து குவிந்த ஆயிரக்கணக்கான கவிதைகளில் திரட்டிய வெண்ணெய்ப் பகுதி ஒன்று:

**இளஞ்செழியன், மோகனூர்**

குங்கும நெற்றி குழைதிகழ் செவிகள்
பொங்கெழில் முகமலர் பொருவில் புருவம்
தொங்கும் வன்சரம் தொடுமென் பூங்கரம்
தங்கப் பொன்னிறம் தாவணி மஞ்சள்
பாடும் கனிவாய் பண்ணிசை மறக்க
ஆடும் ஊஞ்சல் அமைதி காண
வாடும் போக்கோ வஞ்சினை நோக்கோ
நாடும் மயிலாள் நளினம் தோன்றுமே.

**வெ. இராமசுப்பிரமணியன், கல்பா**

கன்னின்மிகு போதைதரும்
 காதலுக்குத் தலைவனவன்
அன்னவரும் போதினிலே
 அச்சம்மிகக் கொண்டனளோ?
துள்ளிவரும் உணர்வுகளால்
 துடிக்கின்ற தோகையவள்
உள்ளமது ஆடியதால்
 ஊஞ்சலது ஓய்ந்ததுவோ?

**ஜே. கிள்ளிவளவன், கல்பாக்கம்**

வண்ணக் கனவுகளை
எண்ணத்தில் சுமந்து
வானில் பறந்திடும், பெண்ணே!
வாழ்வில் அவை காணவே
உன்னில் ஊடாடும் உறுத்தல்களை
ஊஞ்சலில் ஆட்டி உறங்க வைத்து
உறுதியாக இறங்கி வா
இறுதிவரை போராட வேண்டும்.

**சிவரஞ்சனி, புதுதில்லி**

எங்கோ பறந்துவிட்ட
அவள் நினைவுகள்
மீண்டும் அவளில்
சங்கமிக்கையில்தான்
ஊஞ்சல் பலகையின்
தெனிரும்புத் தோரணங்களே!
சலனத்தை மறுபடியும்
நீங்கள் ஸ்பரிசிப்பீர்கள்.

**''பரிதி'' இரா. வேங்கடேசன், அரியாங்குப்பம்**

''ஆடா ஊஞ்சல் ஆடிய நெஞ்சம்
வாடா விழிமலர் வாடிய நினைவுடன்
வாழ்வு முகத்தில் மருட்டும் சாயலென்?
'பெண்ணாட்டுக்கெனப் பேயாய்த் திரிந்து
வாழ்வு வழியை மறிப்பார் தம்மைச்
சிவப்புத் திலகமே நெருப்பைப் பாய்ச்சும்
நெற்றிக் கண்ணாய் மாறிச்
சுற்றிய துயரை சுட்டெரித் திடவே!''

**முகவை சுப்பிரமணியம், நத்தம் செங்கற்பட்டு**

பூமகளைச் சுமந்தபடி ஊஞ்சலது ஆட
பூவைமனம் கற்பனையில் சிந்து கவி பாட
காலிரண்டும் பூமிதனை உந்தி விளையாட
கண்ணிரண்டும் கனவுகளில் நீந்தி உறவாட
காலமகள் படைப்பினிலே வாழ்வுவிலையாக
மாலையிடும் நாளையவள் விழிகளுமே நாட
காலமிதை எண்ணியவள் மன ஊஞ்சலுமே
 ஆட
ஞாலமிதில் ஆடுதம்மா ஆசையெனும்
 ஊஞ்சல்.

**லெமன், சென்னை-17**

என்னூஞ்சல் என்னூஞ்சல்
 என்று முந்தி
ஏகாந்த ஊஞ்சலிலே
 உந்தி யுந்தித்
தன்னூஞ்சல் நெஞ்சுதடு
 மாறும் பெண்ணே,
தம்பதியாய்ச் சகிமாரும்
 ஆடிப் போந்தார்;
உன்னூஞ்சல் நெஞ்சிலொளிந்
 தாடும் நேசன்
ஊரையும் பேரையும்
 தாய்க்கே சொல்லிக்
கன்னூஞ்சல், பொன்னூஞ்சல்
 ஆடாய் பெண்ணே!
கல்யாண சோபனங்கள்
 பாடாய் பெண்ணே!

**ஏ. பி. சத்யா, மதுரை-15**

ஊஞ்சலிலே பறந்து, உச்சிக் கூரையினை
கொஞ்சலாய்த் தொட்டு விட்டேன்.ம்....

உடல்வருந்தப் படித்து. உயர்மதிப்பெண்
பெற்றிருந்தும்....
மேல்படிப்பை தொட விரைந்தேன்
கல்வி ஊஞ்சலில் இடமில்லை!
பொன்னூஞ்சலில் ஆடிய என். முன்னோர்
பெயர்கூறி,
பொறியிலடித்து விட்டார்கள் இனியும்
மரஊஞ்சல் மேலேறி, எதை எட்டியான்
பிடிக்க?

பி. ஸ்ரீதரன், கரூர்-1

எண்ண ஊஞ்சலின்
ஆட்டத்தில்
சின்னஊஞ்சல் இளைத்துவிட்டதே!
பெண்ணே! கீழிறங்கு!
உன் மனத்துடிப்பை
இந்த மரஊஞ்சல் பெற்றுவிட்டால்
சூறாவளியன்றோ
ஜனித்துவிடும்!

ஜி. ராஜேந்திரன், வெள்ளக்கோவில்

மஞ்சத்தில் பங்குகொள்ள
மன்னனவன் வந்துவிட்டால்
தொட்டிலிலே தான்துயில
தூயமகன் பிறந்துவிட்டால்
கண்துஞ்ச நேரமது
காணக் கிடைக்காதென்றோ
ஊஞ்சலிலே இன்றே
ஒயிலாட்டம் நடத்துகிறாய்?

திருமதி கே. பிச்சையம்மாள், சென்னை-1

இளமையின் பூரிப்பில் இதழ்களிலே புன்சிரிப்பு
இளமங்கை விழிகளிலே ஏதேதோ எதிர்
பார்ப்பு
வளமான எதிர்காலம் வசந்தமென
வருமென்று
அளவிலா மகிழ்ச்சியினால் ஆடுகிறாள்
பொன்னூஞ்சல்.

வசந்தம் வருவதற்கு வரதட்சிணை மழை
வேண்டும்;
புன்னகை பூப்பதற்கு பொன்னகை பூண
வேண்டும்;
வாழ்க்கை ஊஞ்சலிலே வசதியுடன் நீஆட,
உன் தந்தை
குருதியை வட்டியாய் கடனுக்குக் கட்ட
வேண்டும்!

பாலகாளிதாசன், சென்னை-92

அவளும் மனமும் ஊஞ்சலில்-நல்ல
பதில் எதிர்பார்க்கிறாள் அஞ்சலில்
சின்ன இதயம் தெரியுது விழிகளில்
இன்னும் என்னென்னவோ மௌன
மொழிகளில்

காதலில் மிதக்கிற வயது
கனவுகள் பலகோடி சுமந்து
சிறகுகள் இல்லாத பறவை
வலம் வரத் துடிக்குது உலகை.

ஜ்வாலா, சென்னை-2

இளமலரே!
இதுதான் வசந்தம்.
வாழ்வின் சொர்க்கம்.
மயங்கும் மனம்
சலிக்கும் வரை ஆடு.
இனியென்றும்
மழைக்காலமே — கண்ணீர்
மழைக்காலமே.

நா. பாஸ்கர், திருச்சி-14

வெட்டிப் பேச்சு அரசியலும் — அதில்
வீண்செலவு விழாக்களும்
விட்டுச்செல்லும் வறுமையினால் —நாட்டில்
விலகிச்செல்லும் நாணயமும்
ஊசலாடும் பொருளாதாரம் — நடுவில்
ஊஞ்சலாடும் மாதாவே
சுட்டெரிக்கும் பார்வையினால் — தீமைகளை
சுடுகாடாய் மாற்றிவிடு.

காயாமொழி சவுக்கத்அலி, பாளையங்கோட்டை

ஊஞ்சல் மனதிற்கு
உரமேற்றும் ஊஞ்சலில்
கைபிணைந்த சங்கிலியே
காளையரால் கைவிலங்காய்
மாறக் கூடாதென்றே...
எரிமலை ரம்பையே
யாருக்கு மனு கொடுக்க
சங்கற்பம் பூண்டாய்!

ப. சக்திவேல், திருத்துறைப்பூண்டி

உன்வசந்த விழிகளில்தான்
எத்தனை ஏக்கங்கள்
நம் சமுதாயத்தில்
வரதட்சணை சனியனின்
சங்கிலிகளை ஒன்றாய்ப் பிணைத்த
இளமை ஊஞ்சலில்
எத்தனை முறைதான் ஒத்திகைபார்ப்பாய்?
புறப்படாத ஊர்வலங்களுக்கு





# சுஜாதா

சென்ற இதழ் தொடர்ச்சி...

“கொடுத்துட்டாங்களா? பாடி பில்டிங்குக்கு சொல்லிட்டீங்களா? அங்கேயேபண்ணிரலாம். கொட்டேஷன் இருக்குது. மேல ஏத்தச் சொல்லாதீங்க. சரி... சரி...''

கே. ஜி. சிங் ஃபோனில் பேசுகையில் கணேஷ் அறையை நிதானமாகப்பார்த்தான். ஜமுனாசிங், இந்தக் கோப்பைகள் எல்லாம் அவனுடையதா? டென்னிஸ் மட்டை?

போனை வைத்துவிட்டு ''பென்ஸ் சாஸி ஒன்று புக் பண்ணியிருந்தது கிடைச்சுருச்சு. பாடி பில்டிங் கொடுத்து மறுபடி பஸ்ஸை ரூட்ல விடறதுக்கு முன்னாடி ஒருநாளைக்கு ஆயிரம் நஷ்டம். ரொம்ப ரிஸ்க் பிஸினஸ்ங்க. அதுவும் இந்த ஆர்ட்டிஓங்க பண்ற அட்டகாசம்!''

''வாஸ்தவம்தான்'' என்றான் வஸந்த்.

''என்ன சொல்லிக்கிட்டு இருந்தீங்க? தாமோதர்... அந்த ஆளை அடையாளம் கண்டுபிடிச்சு வீட்டுக்குத் தகவல் சொல்ல வேண்டியிருந்த சோகமான கடமை எனக்கு ஏற்பட்டுப் போச்சு. பாவங்க. தங்கச்சியும், அப்பாவும் வந்தாங்கன்னு ஞாபகம். ரொம்பக் கதறினாங்க.''

''நீங்கதான் ஸ்பாட்டுக்குப் போயி எல்லா ஏற்பாடும் செஞ்சீங்கன்னு.''

''யார் சொன்னு உங்களுக்கு?''

''உங்க ஆபீஸ்ல சீனிவாச வரதன்...''

''ஓ! அங்க போயிருந்தீங்களா?''

வேலைக்காரன் மூன்று கிளாஸ்களில் பைன் ஆப்பிள் ரசம் ஐஸ்கட்டிகள் மிதக்கக் கொண்டு வந்து வைத்தான்.

''அவரு பங்களூருக்கு எதுக்குப்போனார்னு கண்டுபிடிக்க முயற்சி செய்துக்கிட்டு இருக்கோம்.''

''எனக்கு அதைப்பத்தி ஒண்ணும் தெரியாதுங்க. விபத்தில இறந்து போனது தெரியும். லிஸ்ட்டில பேர் இருந்தது.''

''அந்த லிஸ்ட்டு உங்ககிட்ட இருக்கா?''

''இருந்தது. போலீஸ்காரங்க கிட்ட இருக்குது இப்ப.''

''காப்பி இருக்குமா?'' என்றான் வஸந்த்.

''இல்லீங்க ஏன்?''

''அந்த ஆளு பேரு கடைசியில இருந்ததா ஞாபகம் இருக்குதா உங்களுக்கு? என்னு அவரு அவசரமா கிளம்பினாரா, முன்னாடியே புக் பண்ணிட்டுக் கிளம்பினாரான்னு தெரிஞ்சுக்க விரும்பறோம்.''

''அவ்வளவு விவரம் எனக்கு ஞாபகமில்லீங்க. லிஸ்ட்டுலப்பார்த்தாத்தான்தெரியும்.''

''எந்த போலீஸ் விசாரிக்குது?''

''வேலூர் எஸ். பி. ஒருவர் வந்தாரு.''

சரிதான் வேலூர் போக முடியாது. அந்த ஆளு அட்ரஸ் எப்படி கண்டுபிடிச்சீங்க. வீட்டுக்குத் தகவல் சொல்ல?''

''ஞாபகம் இல்லீங்க. போலீஸ் அதில ரொம்ப ஒத்துழைச்சாங்க. உங்களுக்கு ஃபுல் விவரமும் வேணுமின்னு வேலூர் போலீஸ்கன்னு முத்துவேலன்னு ஒருஎஸ்.பி. அவர்தான் கேஸ் பதிவு டிராஃபிக் பிரிவுன்னு நினைக்கிறேன். இல்லே, ரெகுலர் எஸ்.பி.யோ. பெட்டி, பையைத் தேடினதிலே அட்ரஸ் பெரும்பாலும் செத்தவங்க எல்லோருக்கும் கிடைச்சுருச்சு.''

''அவனோட பெட்டி...?''

''இந்தாளு பொட்டி படுக்கை ஏதும் எடுத்துக்கிட்டுப் போகலீங்க. கட்டின வேஷ்டியோட கிளம்பியிருக்காரு.''

''அப்படியா என்ன அவசரமோ?''

''இல்லே. விதிதாங்க. எனக்கு விதில நம்பிக்கை வந்திருச்சு. ஏன்னு நான் வந்து அந்த வண்டியிலே போகறதா இருந்தேன். நம்புவீங்களா?''

''அப்படியா ஏன் போகலே?''

''போறதுக்குத்தான் கிளம்பினேன். வேலூர்ல ஒரு வேலை இருந்தது. கார்எடுத்துக்கிட்டு போறதுக்கு பதிலா நம்ம பஸ் பிரயாணம் எப்படி இருக்குன்னு போயிட்டு வரலாம்னு தான் இருந்தேன். என்னவோ பாருங்க. தடைப்பட்டுப் போச்சு. காலைல ஒரு எங்கேஜ்மெண்ட் இருக்கிறதை மறந்து போயிட்டேனு. பஸ்ல ஏர்றதுக்கு முன்னாடி ஞாபகம் வந்தது. திரும்பி வந்துட்டேன். இதை என்ன சொல்றீங்க. விதிதானே!''

''ஆக்ஸிடெண்ட் வேலூருக்கு அப்பாலே தானே ஆச்சு!''

''சொல்ல முடியாதுங்க. எனக்காக ஒரு அஞ்சு நிமிஷம் தாமதிச்சிருந்தாங்கன்னு

மர்ம நாவல்

---

சாப்பிட வந்தவர்: சர்வர் காபி இவ்வளவு கருப்பாயிருக்கே... ஏன்?

சர்வர்: அதுவா சர்க்கரையை பிளாக்லே வாங்கறோம்.



ஆக்ஸிடெண்டே நடந்திருக்காதே. விதியா இல்லையா?''

''அப்படித்தான் சொல்லத் தோணுது.''

அப்போது திரைகள் சலனிக்க அந்தப் பெண் உள்ளே வந்தாள் ''டார்லிங்!'' என்று ஆரம்பித்து ''ஸாரி'' என்று நிறுத்திக் கொண்டாள்.

வஸந்த்தின் கண்கள் சற்று விரிவதை கணேஷ் கவனித்தான். பதுமை போல இருந்தாள். இரானிய வகை சிவப்பு. கொஞ்சம் கன்னத்துக்கீழ் சதையைத் தவிர மற்றபடி அப்பழுக்கில்லாத நடன தேகம். உதட்டில் ஒரு செ. மீ. கர்வம், மூக்கில் லேசான தூக்கல்.

''ஜமுனா! இது மிஸ்டர் கணேஷ். மிஸ்டர் வஸந்த். ரெண்டு பேரும் லாயர்ஸ். ஆக்ஸிடெண்ட்டைப் பத்தி விசாரிக்க வந்திருக்காங்க.''

''திஸ் ஈஸ் ஜமுனாசிங் மை வைஃப்!''

''உங்க டான்ஸை நான் பார்த்திருக்கேன்'' என்றான் வஸந்த்.

''அப்படியா எப்ப?'' என்றாள் கண்களில் நிஜ ஆர்வத்துடன்.

''டி. வி.யில.''

''அது அக்டோபர்.''

''இப்ப கூட ஞாபகம் இருக்கு.''

''அப்படியா பொய் சொல்றீங்க.''

''இல்லேங்க நிஜமாவே.''

''ஜமுனா நீ எவ்வளவு பாப்புலர்னு உனக்குத் தெரியாது.''

''ப்ச்'' என்றாள். வஸந்த்தை நேராகக் கண்ணோடு கண் சற்று அளவுக்கு அதிகமாகவே பார்த்தாள்.

''நான் க்ளாஸ் போயிட்டு வர வேட்டாகும்.. நீங்க?''

''நான் எட்டரைக்கு க்ளப் போவேன் ஜம்!''

''ஒரு நிமிஷம்!'' என்று கணவனைத் தனியாக அழைத்தாள்.

''ஓ எஸ் த மனி! கொஞ்சம் இருங்க'' என்று சிங் உள்ளே போக அவள் வஸந்தைப் பார்த்து,

''நீங்க கூட லாயரா?'' என்றாள்.





''ஆமாம்.'' அவள் உடுத்திருந்த ஸல்வார் கமீஸில் நவீனத்துக்கு இடம்கொடுத்து சிற்சில சலுகைகள் அளிக்கப்பட்டு அது அவள் உடலுடன் ஒட்டி, மார்புத் துணியின் மென்மையால் கழுத்தின் இறக்கம் தெரிந்தது.

''டி. வி. உங்களுக்கு நியாயம் பண்ணலைங்க.''

''எப்படிச் சொல்றீங்க?''

''நேரில் பார்க்கறதுக்கு வேறமாதிரி இருக்கீங்க.''

''வேற மாதிரின்னு!''

''மோர் ப்யூட்டிஃபுல்! மச்மோர்!''

''தாங்க்ஸ்! வெய்ட் போட்டுக்கிட்டு இருக்கிற எனக்கு ஆறுதலான வார்த்தை.''

''தமிழ் கூட நல்லாப் பேசறீங்க!''

''நான் தமிழ்தாங்க. அவர்தான் ராஜஸ்தான். நான் மெட்ராஸ்! இவரை கல்யாணம் பண்ணிக்கிட்டு ரெண்டு வருஷம் ஆவுது.'' சிங் உள்ளே வர ''புயல் மாதிரி வாரிக்கிட்டுப் போயிட்டார் என்னங்க?'' என்றாள்.

''இவளையா? ஒரு மாரேஜ்ல பார்த்தேன். உடனே தீர்மானிச்சிட்டேன். எப்படியாவது''

''உடனே விருப்பம்!'' என்றாள்.

''விருப்பம் இல்லே ஜம்மு லவ்! இந்தா செக்கு! எட்ரைக்குள்ள வந்துருவியா டிரைவர் இருக்கானு?''

''இருக்கான். வரேன். மிஸ்டர் வஸந்த்'' என்று அவனைப் பார்த்து வண்ணப்புகையைப் போல புன்னகையைப் பரப்பிவிட்டுச் சென்றாள்.

''ஷி கேன் சார்ம் எனி ஒன்'' என்றார். அவள் போன திசையைப் பார்த்து. ''புவர் ஃபாமிலியில இருந்தவ. சினிமா, சினிமான்னு மெட்ராசுக்கு வந்திருக்கா. டான்ஸ் கத்துக்கப் பணமில்லைன்னு எங்கிட்ட சொன்னா. அந்தக்கணமே தீர்மானிச்சுட்டேன். செலவாளி! ஒரு விதமா புயல் காத்து மாதிரி! முணுக்குன்னா சிரிப்பு, அழுகை! ஸ்டில் எ சைல்ட்! பிடிவாதம்!''

வஸந்த்: ''யூ ஆர் ரியலி லக்கி ஸார்.''

''இல்லேப்பா அழகான பொண்ணைக் கல்யாணம் செய்துக்கக் கூடாது. அதுவும் வயசு வித்தியாசத்திலே. இது கூட என் விதிதான்! ஒரே பையன். மூத்த சம்சாரத்துது. பேசாம இருந்திருக்கலாம். நாற்பத்தி எட்டில் கல்யாணம் எதுக்கு? சபலம்! ஒக்கே என் கவலை எதுக்கு உங்களுக்கு.... வேற எதாவது விவரம் வேணுமா?''

''இல்லே ஸார், தாங்க்ஸ்! வேண்டாம்!''

வெளியே வந்து காரில் போன போது ''பாஸ் இந்தப் பொண்ணு சாலு.''

''சாலுன்னா?''

''ஒப்பன் கேஸ்னு சொல்லணும் 'ஜமுனா சிங் ஈஸ் அவய்லபிள்'னு அர்த்தம். பத்மினி, சித்தினி, சங்கினி... அஸ்தினி.

''அய்யோ.. உன் பாஷை எனக்குப் புரியாதுப்பா.''

''பார்வையை கவனிச்சீங்களா?' உதட்டை லேசா கடிக்கிறதும் கண் ஓரத்தில ஒரு கர்வம். நேரா வச்சகண் வாங்காம பார்க்கறது. அப்புறம் உக்காந்த போது கால்மேல் கால் போட்டுக்கிட்டது. கணிகபுத்திரர் சொன்ன நாலாவது வகை பாஸ் இது! மனசிலருந்து இனிமையும் குழைவும் இருக்குது பாருங்க. லேசா ரொம்ப லேசாத்தான் உறுப்புக்களைப் புலப்படுத்துறா. நீங்கரெண்டு பேரும் பேசிக் கொண்டிருக்கறப்ப ரகசியமா என்னைப் பார்த்தா. அப்புறம் அந்த குரல்! விசித்திரமான தொனி...''

''அப்பா டேய், உன் ஆராய்ச்சி எல்லாம் எனக்கு ஒரு காசுக்குப் பிரயோசனமில்லே.''

''இவளைக் கணக்குப் பண்றது ரொம்ப சுலபம்னேன்!''

''நீ கணக்குப் பண்ணு, கெமிஸ்ட்ரி பண்ணு. என்னை இதில சேர்க்காதே!''

''ஆடறேன் பாஸ்! ஐ ஸ்வே.'' ரொம்ப அதிசயமாத்தான் இந்த மாதிரி ஃபைவ் பை ஃபைவ் சாலுமால் கிடைக்கும்!''

''உன் பரிபாஷையெல்லாம் நிறுத்திட்டுக் காதர்பாய் கேஸைப் பாரு.''

''காதர்பாய்! பாஸ் ஹேவ் எ ஹார்ட்! மனுஷன் அப்படியே ஜுரம் வந்தாப்பல சகலமும் ஒரு மாதிரி பசலையா இருக்கேன்.''

''அடச்சீ!''

## 5

ஆபீஸுக்குத் திரும்பிய போது மாலை ஐந்தாகி விட்டது. பையன் கதவு திறந்து பெருக்கி பேப்பர்களை அடுக்கி ப்ளாஸ்கில் காப்பி வாங்கி வைத்திருந்தான். அந்தப் பெண் பிரசன்னா உட்கார்ந்திருந்தாள். வஸந்த் வியர்வையைத் துடைத்துக்கொண்டு,

''என்ன அதுக்குள்ள வந்துட்டீங்க?''

''சைனா பஜார் பக்கம் வந்தேன். அண்ணனைப் பற்றிச் சில விவரங்கள் சொல்லலாம்னு வந்தேன். ஆம் ஐ டிஸ்டர்பிங் யூ?''

''ஆமாம்!'' அவள் முகம் சுருங்க ''அதனால என்ன பரவாயில்லே. சொல்லவேண்டியதை சொல்லிடுங்க.''

''உங்களால ஏதாவது கண்டுபிடிக்க முடியுங்கறதா?''

''இல்லேங்க அதை ஏன் கேக்கறீங்க? பெரும்பாலும் இன்னைக்கு உங்க கேஸ்தான். பல கம்பெனியில, கம்பெனி முதலாளி கிட்ட..''



''ஒரு புடவை வாச் கலாம்னு கிளம்பி னோம், நீங்களும் கூட வர்றீங்களா?'

''ஏதாவது தெரிஞ்சுதா?''
''இல்லே.''
கணேஷ் ''உங்க அண்ணனைப் பத்தி என்ன சொல்லணும் உங்களுக்கு?'' என்றான்.
''அவன் எங்க வேலை பார்த்தான், அப்பாகிட்ட எப்படி இருந்தான். இதெல்லாம்.''
''அது தேவைன்னு நாங்களே கேட்டுக்கறோம்.''
''இரு வஸந்த்! சொல்லுங்கம்மா.''
வஸந்த் கணேஷை முறைக்க ''எங்க அண்ணன் இதுவரைக்கும் மூணு வேலை மாறியிருக்கான். எல்லாம் அப்பா வாங்கிக் கொடுத்ததுதான். ஸ்திர புத்தி கிடையாது. வேலைல இருப்பான். திடீர்னு நாளையிலேருந்து வேலைக்குப் போகமாட்டேன் அப்பாம்பான். அப்பாவும் எவ்வளவோ முயற்சித்தார். சிலவேளை என்கிட்டயே சொல்லி வருத்தப்பட்டிருக்கார். ஒருவேளை டிப்ரஷனாகிப் போய் அப்பாவைத் தொந்தரவு பண்றமேன்னு வருத்தப்பட்டு திடுதிப்புன்னு பங்களூருக்குக் கிளம்பியிருக்கானுன்னுத் தோணிச்சு. யோசித்துப்பார்த்தா அப்படியில்லே. சாதாரணமா தமாஷாகவே பேசிக்கிட்டு இருந்தான் அப்பாகிட்ட கூட. அப்பதான் திடீர்னு போன் கால் வந்தது. இவன் பேசவே இல்லே. 'சரி வரேன்னுன்' வெச்சான் கிளம்பினான் —''
''போன் கால் ட்ரேஸ் பண்றது அவ்வளவு சுலபமில்லேங்க.''
அவள் தன் கைப்பையை எடுத்து அதிலிருந்து ஒரு சின்ன டயரியை எடுத்துக் கொடுத்தாள். இதில் நிறைய டெலிபோன் நம்பர் இருக்கு. அண்ணு எழுதி வெச்சிருந்தது. இதுவரைக்கும் நானோ அப்பாவோ அவன் பெட்டியைக் குடைஞ்சதே இல்லே. அவன் இறந்ததற்கப்புறம் அவன் ஷர்ட், பாண்ட் எல்லாம் வண்டலூர்ல அனாதை ஆசிரமத்துக்கு அனுப்பிச்சோம். அப்ப இது கிடைச்சது. இதை வெச்சுக்கிட்டு ஏதாவது ட்ரேஸ் பண்ண முடியுமா பாருங்க.''
''சரி வையுங்க.''
''இன்னும் எத்தனை நாள் ஆகும்?''
''ஒன் வீக்ல சொல்லிட்ரேம்மா.''
''அப்ப நான் வரட்டுமா வஸந்த்?''
''போய்ட்டு வாங்க.''
அவள் போனதும் ''என்னடாது வஸந்தா இப்படி ஒரு பெண் பிள்ளையை புறக்கணிக்கிறன். நம்பவே முடியலையே!''
''ப்ச்! போங்க பாஸ். ஜமுனா சிங்கைப் பார்த்ததும் கஸ்தாயிட்டேன். பொண்ணில்லே அது! அநங்கரங்கம். மதனமேடை. போயும் போயும் இந்தக் கிழச்சிங்கம்தான் ஆப்டானு? வஸந்த்! நீ எங்கேடா போயிருந்த. ஒரு வார்த்தை சொல்லியிருந்தா! கல்யாணம் பண்ணிக்கிட்டு பர்மனண்டா பக்கத்திலேயே ஜால்ரா வெச்சுக்கிட்டு தாம்த தீம்த தக தாம்த தீம்த தக...''
''ஷட் அப்...''
''அநியாயம் இந்த சிங் பண்ணது!''
''எது?''
''ஜமுனாவைக் கல்யாணம் பண்ணிக்கிட்டது''



''அப்ப ஒண்ணும் சந்தோஷமா இருக்கிறதாத் தெரியலை. ஜாஸ்தி விரக்தி தெரிஞ்சுது!''
''இந்த வயசிலே போய் கல்யாணம் பண்ணிக்கிட்டா?''
''எல்லாமே வஸந்த் நினைக்கிற மாதிரி நடந்துடறதா?'' என்று கணேஷ் அந்தச் சிறிய குறிப்புப் புத்தகங்களை எடுத்துப் பார்த்தான். சிற்சில இனிஷியல்களுக்கு எதிரேசிற்சில டெலிபோன்எண்கள்இருந்தன.
''இதை வேணு விசாரியேன்டா?''
''ஒவ்வொரு எண்ணு டெலிபோன்பண்ணிகிட்டு இருக்கணுமா? வேற வேலையில்லே!''
''அநங்கரங்கத்தைப் படிக்கிறதுதான் பெரிய வேலையாக்கும்! காதர்பாயைப்பாரு!''
''பாஸ்! ஒரு சின்ன ஜோக்கு சொல்லியே ஆகணும். தலை வெடிச்சுரும்.''
''மெக்ஸிகோவா! வேண்டாம்ப்பா சொல்லியாச்சு!''
''இல்லே பாஸ் உபத்ரவமில்லாதது. நம்ம சிங் மாதிரி ஒரு ஆளு இன்ஷ்யூரன்ஸ் பண்ணிக்கப் போறான். அதை ஜமுனாமாதிரி ஒரு மனைவிகிட்டே பெருமையாச் சொல்லிக்கிட்டு இருக்கானும். ''அவங்க எனக்கு அம்பத்தஞ்சு வயதுன்னு நம்பவே இல்லே கண்ணு! சட்டையைத் திறந்து மார்ல நரைமயிரைக் காட்டினதும் தான் நம்பினாங்க'' அப்படின்னான். அதுக்கு அந்த மனைவி ''சட்டையை எதுக்கு கழட்டணும் பேசாம பாண்ட்டை ....'' கணேஷ் குறுக்கிட்டுப் ''படுபாவி போதும்! கேஸைப் பாரு!'' என்றான்.

## 6

மூன்று நாளைக்கு இருவரும் அதைத் தொடர்ந்து விசாரிக்க இயலாமல் கோர்ட்டில் பிஸியாக இருந்து விட்டார்கள். வஸந்த் அவ்வப்போது ஜமுனா ஜமுனா என்று அங்கலாய்த்துக் கொண்டிருந்தான். பற்பல முறை சிங் வீட்டுக்குப் போகவேண்டும் என்றான். ''இன்னும் சில விஷயங்கள் தெரிஞ்சுக்கணும்'' என்றான்.

---

''எனக்கு எதற்கு திருஷ்டி சுற்றுகிறாய் கமலா?''
''விண்வெளி வீரர் போல இருக்கீங்களே என்றுதான்..''





''உதைப்பேன்'' என்று கணேஷ் அதட்ட ஒரு மதியத்தின் போது வஸந்த் வேறு செயலின்றி பிரசன்னு. கொடுத்திருந்த குறிப்புப் புத்தகத்தில் இருந்த டெலிபோன் எண்களில் ஒன்றைத் தேர்ந்தெடுத்துச் சுழற்றினன்.

''அலோ'' என்றது பெண் குரல்.

''நான் வந்து தாமோதரனுடைய...''

''தாமு! தாம்! எங்கய்யா போயிட்ட! தாமு!'' என்று பளர் என்று டாலடிக்கும் உற்சாகத்துடன் அந்தக் குரல் வஸந்த்தைத் திகைக்க வைத்தது.

''பார்டன் மி எம் பேர் வஸந்த்!''

''தாமு இல்லையா? எங்க அவன்?''

''தாமோதரன் இறந்து போயிட்டாருங்க நீங்க யார் பேசறது?''

மறுமுனை படக்கென்று வைக்கப்பட்டது.

வஸந்த் கொஞ்ச நேரம் டெலிபோனையே பார்த்துக் கொண்டு யோசித்தான். பிறகு தீர்மானித்து அந்தப் பட்டியலிலிருந்து மற்றொரு நம்பரைத் தேர்ந்தெடுத்தான்.

''அலோ...'' குழந்தைக் குரல். தூரத்திலிருந்து 'யாரு?' என்ற மற்றொரு பெண் குரல்.

''இங்க குடு!''

''நமஸ்காரம் எம் பேர் வஸந்த். தாமோதரன் வந்து...''

''வராரா?''

''இல்லை. அவர் வர முடியாத நிலையில இருக்காரு.''

''அப்படியா எப்ப சௌகரியமோ அப்ப வரட்டும்னு சொல்லுங்க நல்லாருக்காரா?''

''நீங்க யார் பேசறதுங்க?''

இதைக் கேட்ட உடன் மறுமுனை வெட்டப்பட்டது.

வஸந்த் அந்த டெலிபோன் எண் பட்டியலை கவனித்துக் கொண்டே ''பாஸ் இந்த நம்பர் எல்லாம் ஒரு மாதிரி பொம்பளைங்க குரலா இருக்குது. இந்தாளு தாமோதரன் பத்தி கொஞ்சம் விசாரிக்கலாம் போலத் தோணுது. கொஞ்சம் நம்ம டைப்பு போல.''

''என்னடா?''

''அந்தப் பொண்ணுங்க குரல்லையே பெட்ரும் தெரியுது பாஸ்.''

''நம்பறேன் நீ இதில எல்லாம் அனுபவப்பட்டவன்தானே.''

''எல்லாம் அன்லிஸ்டட் நம்பரா இருக்கும். இல்லை சரவணா ஸ்டோர்ஸ்னு உபத்திரவமில்லாத பேர்ல இருக்கும். என்ன செய்ய?''

''உனக்கு என்ன தோணுது?''

''இந்தாளு எதுக்கு பங்களூர் போனான்னு சுலபமா இப்ப கண்டுபிடிச்சிரலாம்.''

''எப்படி?''

''பொம்பளை விஷயமா இருக்கும். செமை இட்டன் போயிருக்கு.''

''ஒரு வேலை செய்யி. நாளைக்கு அந்தப் பொண்ணு பிரசன்னு இட்டப் போயி அவன் முந்தி எங்கே வேலை பார்த்தான்னு சொன்னுளே அந்த ஆபீஸ்ங்களை எல்லாம் விசாரிச்சுக்கிட்டு வா. அதிலிருந்து ஆள் எப்படிங்கிறது ஊர்ஜிதமாயிரும். அதுக்கப்புறம் பங்களூருக்கு காரணம் கண்டுபிடிக்கிறது கஷ்டமில்லை.''

''அதோட கேஸ் க்ளோஸாயிரும்'' என்றான் வஸந்த் சற்று துக்கத்துடன்.

''மறுபடி ஒரு தடவை அந்த ஜமுனு சிங்கை விசாரிக்கணும்னு ஆசை உனக்கு! டேய் இருக்குறன்ன ''பிறனில் விழையாமை''க்கு இன்னும் வரலையா?''

''சே, சே! தப்பா நினைக்காதீங்க. கேஸுக்கு சம்பந்தம் இருந்தாத்தான் அந்தப் பக்கம் போவேன்.''

''அந்தப் பொண்ணு உள்ளே வந்ததுமே உன் கண்ணு விரிஞ்சது பாரு!''

''இன்னம் கூடப் படபடப்பு அடங்கலை.''

''அதுக்கு ஒரே ஒரு பரிகாரம் இதைப் படிக்கிறது'' என்று கணேஷ் ரஸ்ஸலின் அவுட் லைன் ஆஃப் பிலாசபி என்கிற புத்தகத்தை அவனிடம் காட்டினன்.

''படிச்சாச்சு பாஸ்! காதல்ங்கறதே, அன்புங்கறதே ஒருவிதமான நார்ஸிஸம்னு சொல்லியிருக்காரு.''

''அடப்பாவி இதையும் படிப்பியா நீ?'' என்று வியந்தான் கணேஷ்.

## 7

**வ**ஸந்த் மறுதினம் லிட்டி யூனியன் ப்ரைவேட் (கப்) ளைப்பிற்குப் போயிருந்தான். பிரசன்னுவின் அண்ணன் தாமோதர் முதலில் வேலை பார்த்த இடம். கார்கள் பம்பருக்குப் பம்பர் தொட்டுக் கொண்டு நெருக்கமாக நிற்க, கருப்பாக தட்டிகட்டி டென்னிஸ் விளையாட்டு அந்தப் பக்கம் 'ப்ளக், ப்ளக்' என்று சப்தித்துக் கொண்டிருந்தது. புல்வெளியில் பிரம்பு நாற்காலிகளில் செல்வந்தாகள் பியர் அருந்திக் கொண்டிருக்க அவர்கள் மனைவியர் பாண்ட் போட்டுக் கொள்ளும் ஆசைகள் எல்லாம் நிறைவேறியிருந்தன. மெம்பர் ஷிப் மெடிக்கல் காலேஜ் அட்மிஷனை விடக் கடினமானதாம். இந்திரா காந்தியைத் தெரிந்திருந்தால் வெயிட்டிங் லிஸ்ட்டில் சேர்த்துக்

---

''உங்க படத்தைப் பார்த்த மக்களிடையே விழிப்புணர்ச்சி பரவியிருக்கு.''

டைரக்டர்: ''அப்படியா?''

''ஆமாம். காது கிழியற மாதிரி நுசை அடைத்து ஒருத்தரையும் தூங்க விடலியே.'' -இளையூர். அ. கதிர்வேல்



கொள்வார்களாம் என்பது வஸந்துக்குத் தெரியும். பிலியர்ட்ஸ் ரூமைக் கடந்து லைப்ரரியைக் கடந்து ஸ்டீவர்டின் அறைக்கு வந்தான். பெயர்ப் பலகையை ஒருமுறை பார்த்துக் கொண்டு, ''மிஸ்டர் ஜேக்கப் என் பேரு வஸந்த்.''

''மெம்பரா?''

''இல்லே! இங்க கொஞ்ச நாளைக்கு முன்னால வேலே செஞ்ச தாமோதரனைப் பத்திக் கேக்கணும்.''

தாமோதரன் என்ற பெயரைக்கேட்டதும் ஒருவிநாடி உதடுகளில் இறுக்கம் ஏற்பட்டது அந்த ஜேக்கப்புக்கு.

''நான் ஒரு லாயர். அவன் சொத்து விவகாரங்களைக் கவனிக்கணும். உங்களுக்குக் கூட அவர் ஒரு சின்ன பரிசு கொடுக்கணும்னு சொல்லிட்டுப் போயிருக்கார்.''

''போயிருக்கார்னு எங்க?''

''தாமோதர் ஒரு பஸ் விபத்தில இறந்து போயிட்டார் தெரியாதா?''

''அடப்பாவி போயோ!''

''போயி! அதனால அவரைப் பத்தி நான் கேட்கிற கேள்விகளுக்கு உபத்திரவம் ஏதும் கிடையாது. நான் போலீஸ் கிடையாது, குடும்ப லாயர்!''

''என்ன கேக்கணும்'' இன்னும் சந்தேகம் குரல், பார்வை.

''அவருக்கு பங்களூர்ல யாரையாவது தெரியுமா? இதை எதுக்கு கேக்கறேன்னு விபத்து நடந்த அன்னைக்கு பங்களூருக்கு அவசரமாப் பொறப்பட்டுப் போயிருக்கார் தாமோதரன். எதுக்காகன்னு கண்டுபிடிக்க முயற்சி பண்ணிக்கிட்டு இருக்கேன். அவரை அங்க அழைச்சது யாரு? உங்களுக்குத் தெரிஞ்சிருக்குமா? யாராவது பங்களூர் பார்ட்டி!''

ஜேக்கப் ஒரு நீண்ட பெட்டியைத் திறந்து அதிலிருந்து மஞ்சள் முயல்கள் போலிருந்த டென்னிஸ் பந்து இரண்டை உருட்டிக் கொண்டு ''மிஸ்டர் ஜயந்த்...''

''வஸந்த்.''

''ஸோரி! வஸந்த். நான் கள்ளம் பறையறதில்லே. இந்த தாமோதரன் ரொம்ப மோசமான ஆளாக்கும். பங்களூர்ல மட்டுமில்லா, மெட்ராஸ், கோயமுத்தூர், பாண்டி எல்லா இடத்திலயும் அவனுக்குப் பெண் குட்டிகள் உண்டு. ஊருக்கு ஊர்! நான் என் கண்முன்னால பார்த்ததாக்கும்.''

''அப்படியா என்ன பார்த்தீங்க?''

''அதெல்லாம் பரயக் கூடாத விஷயம். ரொம்ப மோசம்.'' குரலைத் தாழ்த்திக் கொண்டு.'' ஒரு பெண்ணைப்பார்த்தால் போதும். ஒரு ஆழ்ச்சத்துக்குள்ளே....'' கையால் சைகை காட்டினான்.

''அப்படியா இண்டரஸ்டிங்! ஆள் ரொம்ப அழகா இருப்பானா?''

''அப்படியும் இல்லே! அவங்கிட்ட என்னவோ இருந்தது ஒன்னுங்கிளாஸ் ரோக்! இருந்தாலும் பேச்சில் மனோகரமாய் வசீகரம், ஒரு, ஒரு புஞ்சிரி! ஏதோ ஒன்னு தவறுமல் பெண்களை!'' மறுபடி சைகை.

''அடப்பாவி! அந்தாளு இங்க என்னவா இருந்தான்?''



''எனக்கு அஸிஸ்டெண்டாய்த்தான் இருந்தது. வேலேயில ரொம்ப சுத்தம்.''

''எந்த வேலே?''

''இளப் வேலேதான். பட்சே ரொம்ப இந்த விவகாரம் ஜாஸ்தியாப் போயி ஸ்காண்டலாயிப் போயி. செகரட்டரி சடுதாசி கொடுத்து பணியிலிருந்து நீக்கி.''

''அப்படியா பங்களூர்ல அவனுக்கு யாராவது தெரிஞ்சிருக்கலாம்கறீங்க.''

''ஓ, ஏராளம்.''

குறிப்பா யாருன்னு உங்களுக்குத் தெரியாது.''

''தெரியாது.''

''ரொம்ப தாங்க்ஸ் வரட்டுமா?''

வஸந்த் திரும்பி டென்னிஸ் கோர்ட்டைக் கடந்து செல்லும்போது ஒரு பெண் மார்க்கருடன் ஆடிக் கொண்டிருந்தாள். வெயிலில் மேனி சிவந்து வெள்ளாடையில் கைக்குக் கீழ் வியர்த்து ஓடி ஆடிப் பந்தடித்தாள். வஸந்துக்கு அந்தப் பெண்ணைப் பார்த்த ஞாபகமாக இருந்தது.

சற்றே அருகில் சென்றபோது ஜுமுஜுசிங்.

''ஹலோ என்னை ஞாபகம் இருக்குதா?''

அவள் திரும்பி முகத்தைத் துடைத்துக் கொண்டே. ''ஸாரி உங்களை...''

''வஸந்த். லாயர், அன்னைக்கு உங்க ஹஸ்பெண்டைப் பார்க்க வந்திருந்தோமே.''

---

## பறக்கும் முதலமைச்சர்

மத்தியப் பிரதேச முதலமைச்சர் அர்ஜுன் சிங் போபாலில் பெட்காபி சாப்பிட்டுவிட்டு காலை டிபனுக்கு டில்லி சென்று விடுவார். மதிய உணவு பம்பாயில். இரவு சாப்பாட்டுக்கு ஜெய்ப்பூரில் இருப்பார்!

1984 ஜனவரி 31 முடிய அடுத்தடுத்து வந்த 306 நாட்களில் 336 தடவை இவர் விமானப் பயணம் செய்துள்ளார். இரண்டு விமானங்கள் மாநில அரசுக்கு இருந்தும் முதலமைச்சருக்குத் திருப்தி ஏற்படவில்லே. மூன்றாவதாக இரண்டேகால் கோடி ரூபாய்க்கு சூபர் கிங் ஜெட் விமானத்தை வாங்கினார்.

ஆதாரம்: இந்தியன் எக்ஸ்பிரஸ்.
தகவல்: வெள்ளகால் இரா. கந்தையா.





''ஓ. எஸ், ஞாபகம் வருது.''

அவள் சிரிப்பு பழுதில்லாமல் இருந்தது. ''நீங்க இந்த கிளப்பில மெம்பரா?''

''இல்லே மிஸஸ் சிங். ஒரு விஷயம் விசாரிக்க வந்தேன். உங்க ஸ்டுவர்ட் கிட்ட.''

''ஜமுனான்னு கூப்பிடுங்க போதும். உங்களுக்கு வேண்டிய தகவல் கிடைச்சுதா? அன்னைக்கு சிங்கை எதுக்குப் பார்க்க வந்தீங்க?'' பேஸ் லைனில் சருக்கி ஒரு பேக் ஹாண்ட் ரிடர்ன் பண்ணும்போது அவள் அணிந்திருந்த வெண்ஸ்கர்ட் ஒரு முறை அலை பாய்ந்தது. வஸந்துக்கு சங்கடமாக இருந்தது. ''அன்னைக்கும் இன்னைக்கும் ஒரே விஷயம் தான். உங்களுக்கு தாமோதர்ங்கற வரைத் தெரியுமா?''

''தெரியும்.'' செட்டுக்கு இடையில் துண்டால் முகத்தைத் துடைத்துக்கொண்டே அவனை ஏறிட்டுப் பார்த்தாள்.

''அப்படிப்பார்க்காதீங்க. எனக்குக் கொஞ்சம் ஹார்ட் வீக்.''

அவள் சிரித்தாள். ''அன்னைக்கே கவனிச்சேன். ரொம்ப ஃப்ளாட்டர் பண்றீங்க. தாமோதருக்கு என்ன இப்ப?''

''அந்த ஆள் செத்துப் போயிட்டார் தெரியுமா?''

அவள் முகம் சட்டென்று வெளிறியது. ''இஸ் இட்! ஓ, மைகாட்! எனக்குத் தெரியலே தெரியாதே''

''அன்னைக்கு அவன் பங்களூருக்குப் போனது உங்க ஹஸ்பெண்டு பஸ் ஸர்வீஸ்லதான். ஆக்ஸிடெண்டாச்சில்லே பங்களூர் பஸ்? அதில போயிருக்கான்! உங்களுக்கு தாமோதரை எவ்வளவு நல்லாத் தெரியும்?''

''கிளப்பில பார்த்திருக்கேன் அவ்வளவு தான்'' என்றாள்.

''பங்களூர்ல அவனுக்கு தெரிஞ்ச ஆளு உண்டான்னு விசாரிக்கணும். உங்க ஹஸ்பெண்டு சொல்லலே? இந்தாளு செத்துப் போயிட்டதா?''

''அவர் பிஸினஸ் விஷயம் ஒண்ணும் எங்கிட்ட சொல்ல மாட்டாரு. நானும் கேட்டுக்கறதில்லே. பஸ் விபத்தில மாட்டிக்கிச்சுன்னு தெரியும். எத்தனை நஷ்டம்னு? சொன்னார். இன்ஷூரன்ஸ் எத்தனை கொடுப்பாங்கன்னு சொன்னார். ஆர்ஸி புக்கே எம் பேர்ல இருந்ததாலே.'' அவள் தன் நகத்தைக் கடித்துக் கொண்டே யோசனையில் இருந்தாள். ''தாமோதா போயிட்டாரா? இட்ஸ் எ பிட்டி!'' என்றாள்.

''கடைசியா அந்த ஆளை எப்பப் பார்த்தீங்க?''

''எப்பப் பார்த்தேன்?'' என்றாள். ''நீங்க தாமோதர் ஃப்ரெண்டா?''

''இல்லேங்க. அவருடைய தங்கை எங்களை விசாரிக்கச் சொன்னாங்க. பங்களூருக்கு எதுக்குப் போகணும்னு?''

''எதுக்குப் போனாராம் சண்டுபிடிச்சீங்களா?''

''இல்லேங்க. ஆளு உத்தேசமா காரணம் தெரிஞ்சுப் போச்சு.''

''என்ன காரணம்?''

''வெளிய சொல்லிக்கும்படியா இல்லே. நான் கூட டென்னிஸ் ஆடுவேன். நீங்க ஆடுங்க. நான் கொஞ்ச நேரம் பார்த்துட்டுப் போறேன். பந்து படறதோ படலேயோ நீங்க கோர்ட்டிலே நகர்றதே வஸந்தம்! ''மனக்கதவு தட்டி மாணிக்கம் கொட்டுகின்ற எனக்கு வயதாவதில்லே; என்றும் இளையவள் நான்'னு நீங்கதான் கவிதை எழுதினீங்களோ?''

அவள் லேசாகப் புன்னகைத்தாள்.. ''வஸந்த், நான் உங்க கூட தனியாப்பேசணும்'' என்றாள்.

''பேசலாம் இப்பவே ஆஜர்'' என்றான்.

''இப்ப இல்லே அவர் என்னை பிக்—அப் பண்ணிக்க வந்துருவார். நாளைக்கு காலையில பத்து பத்தரை மணிக்கு எங்க வீட்டுக்கு வர்றீங்களா?''

''அதைவிட வேற என்ன வேலே எனக்கு?'' என்றான் வஸந்த் உற்சாகத்துடன்.

## 8

''நிஜமாவே சொல்றேன் பாஸ். நற் செயலாத்தான் ஜமுனாவை சந்திச்சேன். தாமோதரைப் பத்தி விசாரிக்க யூனியன் கிளப் போறேன். அங்க இந்தம்மா டென்னிஸ் ஆடிக்கிட்டு இருக்காங்க! கையை ரெண்டு பாரு, மெய்ல ரெண்டு பாரு என்ன ஓட்டம், என்ன ஆட்டம்!''

''தாமோதரைப் பத்தி விசாரிச்சியா மறந்துட்டியா?

''எல்லாம் விசாரிச்சாச்சு. ஜேக்கப்புன்னு ஸ்டூவர்ட் எல்லாம் புட்டுப் புட்டு வெச்சுட்டான். பாஸ் இந்த தாமோதர்ங்கிறவன் சரியான காஸனோவாபோல

---



### கலபமானது!

ஒருசமயம், முல்லாவின் பக்கத்து வீட்டுக்காரன், துணி உலர்த்தும் கொடியை இரவல் கேட்டு வந்தான்.

''அடடா...! அதில் நான் மாவு உலர்த்தியிருக்கிறேனே..!'' என்றார் முல்லா.

''துணி உலர்த்தும் கொடியில் .. மாவு எப்படி உலர்த்த முடிந்தது?'' என்று இரவல் கேட்டு வந்தவன் திருப்பிக் கேட்டான்.

''இரவல் கொடுப்பதைக் காட்டிலும் அது சுலபம் தான்!'' என்றார் முல்லா அமைதியாக.

—பானு மணாளன்.

பண்டைக்காலம் முதல் பிரசித்தமான கிராம்புத்
தைலத்தின் குணாதிசயங்களின் பயனைப்பெற ஆயிரக்
கணக்கான குடும்பங்கள் இப்பொழுது

# கிராம்புத் தைலம்

கொண்ட

# ப்ராமிஸ்

உபயோகிக்கிறார்கள். நீங்களும் உபயோகியுங்கள்






**ப்ராமிஸ்**

- பற்சிதைவிலிருந்து பாதுகாக்கிறது.
- வாய்க்குப் புத்துணர்ச்சி தருகிறது.
- துர்நாற்றத்தை அகற்றுகிறது.









சர்வதேச கோல்ட் மெடல் பெற்ற தயாரிப்புகள்

ஆரோக்கியமான பற்கள்,
ஈறுகள் மற்றும் புத்துணர்ச்சி மிக்க மூச்சு

பல்சாரா தயாரிப்பு

CHAITRA-BLS-668 TAM



இருக்கு. ஊருக்கு ஊர் உருப்படியாம். புல்லுக்குத் தண்ணி இரைக்கிற பொண்ணைக் கூட விட்டு வைக்க மாட்டானாம். இதுக்கெல்லாம் மச்சம் வேணும் பாஸ்! கேஸ் தீர்ந்துப் போச்சு! பிரசன்னு இட்ட சொல்லிட வேண்டியதுதான். த பாரும்மா. உங்கண்ணு விவகாரம் கொஞ்சம் உள்ளே போனா டெக்கமரான் கதை மாதிரி விரியறது. பங்களூர் போறதுக்கு அவனுக்கு ஏகப்பட்ட காரணம் இருக்கலாம். ஆனா அதையெல்லாம் குடைஞ்சா நல்லா இருக்காது. மரியாதை கெட்டுப் போயிடும்னு சொல்லிடலாம்.''

''போன் கால்?''

''எஸ். டி. டி. போட்டு ஏதாவது பொண்ணு கூப்பிட்டிருக்கும்! உடனே பஸ் பிடிச்சு வா! யாரும் இல்லே. தனியா இருக்கேன்னு. இவனும் போட்டது போட்டபடி கிளம்பியிருக்கான்! பாஸ், தாமோதர் அந்த கிளப்பிலகொஞ்சநாளைக்குவேலைபண்ணியிருக்கான். கணக்கும் பண்ணியிருக்கான்னு தெரியுது. ஜேக்கப் சொல்றுப்பல ஏய்! பயங்கரம்! பெண் குட்டின்னு வார்த்தை அப்புறம். பாஸ் ஜமுனா நாளைக்குக் காலேல என்னைக் கூப்பிட்டனுப்பிச்சிருக்கா.''

''இது மட்டும் என்னவாம்?''

''சும்மா போற போக்கில சிற்பியோட கவிதையை அவுத்து விட்டேன். அம்மா படு இம்ப்ரெஸ் ஆயி நாளைக்குக் காலேல எனக்கு இன்விடேஷன்.''

''நானும் வரேன்'' என்றான் கணேஷ்.

''நீங்க எதுக்கு காதர்பாய் கேஸைப் பாருங்க.''

''வஸந்த், ஒரே ஒரு அட்வைஸ். மத்தவங்க பெண்டாட்டிங்கள விட்டுடு!''

''மத்தவங்க பெண்டாட்டிதான் ரொம்ப ஸேஃப்!''

''உதை வாங்கப் போறே. அயோடக்ஸ் வாங்கி வெச்சிக்க ஒரு பாட்டில்!''

## 9

கணேஷ் அன்றிரவு காதர்பாய் கேஸில்தான் ஆழ்ந்திருந்தான். வஸந்த் அவ்வப்போது கணேஷ் கேட்ட சட்டப் பாயிண்டுகளைச் சொல்லிக் கொண்டிருந்தான்.

''அப்பீல வந்து அப்பெல்லேட் கோர்ட்டில டிக்ரி ரிவர்ஸ் ஆயிருந்துதுன்னாரிமாண்ட் ஆர்டர் பண்ணலாம்.''

''இன்னொரு கண்டிஷன் இருக்குடா. ஆடர்ர் 41-ல 24-ஐப் பாரு.''

''எப்டி பாஸ் இவ்வளவு ஞாபகசக்தி?''

''ஒரு எழவும் இல்லே. குறிச்சு வெச்சிருக்கேன் எடு கோடை.''

''என்னவோ ஆர்டர் என்னவோ டிக்ரி'' கணேஷ் கொட்டாவி விட்டு டி. வியை சுவாரசியமின்றித் தட்டினான். * உடனே சங்கீதம் கேட்டு பிம்பம் உயிர் பெற்று ஒரு மாது கஷ்டப்பட்டு நடனம் ஆடிக் கொண்டிருந்தாள்.

''இவங்களை எல்லாம் பதினெட்டு வருஷத்துக்கு முன்னால கூப்டிருந்தா ஓயிலா இருக்கும் பாஸ். ஆடறவங்களையும் துன்புறுத்தறாங்க. பார்க்கறவங்களையும்.''

''இது என்னடா டான்ஸா?''

''இதுதான் ஒடிஸ்ஸி. மொத்தமே மூணு நாலு வகை டான்ஸ்தான் இருக்கு. குச்சிபுடி. கதக். பரதநாட்டியம்... மத்ததெல்லாம் * சினிமா டான்ஸ்.''

கணேஷ் அவன் சொல்வதைக் கவனிக்காமல் ''அன்னிக்கு அந்தப் பொண்ணு சொன்னது கூட ஒடிஸ்ஸிதானே?'' அலமாரிக்குச் சென்று பழைய செய்தித் தாள்களைப் புரட்டினான். ஷ் என்று சீழ்க்கை அடித்தான். ''வஸந்த் அந்தக் குறிப்புப் புத்தகத்தைக் கொண்டா.''

''எது பாஸ்?''

''அதான் அந்த தாமோதருடைய டெலிபோன் எண்களின் பட்டியல்.''

''அது எதுக்கு?''

''கொடேன் சொல்றேன். வஸந்த் அதை எடுத்துக் கொடுக்க ''ம்? இஃப் ஐ'ம் நாட் மிஸ்டேக்கன்...'' என்றான்.

''என்ன பாஸ் உளர்றீங்க. இல்லே ஏதோ பயங்கர சிந்தனை!''

''இந்த நம்பரை ட்ரை பண்ணிப்பாரு!''

''எதுக்கு?''

''சுழட்டேன் சொல்றேன். அப்புறம் நான் கேக்கற கேள்விகளுக்குக் குறுக்கே பேசாம பதில் சொல்லு. பஸ் விபத்து தினத்தின் போது பஸ் எப்ப புறப்பட்டது?''

''ஒம்பதரைக்கு.''

''குட்! இறந்து போன தாமோதருக்கு பங்களூர்ல யாரையாவது தெரியுமா? விவரம் தெரிஞ்சுதா?''

''விவரம் தெரியலே. ஆனா அங்க நிச்சயம் கேர்ள் ஃப்ரெண்டு இருக்கலாம்னு தோணுது.

---

**பாவம் பாப்பா!**

கெய்ரோ போலீஸ் நிலையத்தில் அழுதபடியே ஒரு சிறுமி நுழைந்தாள்.

''எங்க அப்பா இட்டே நிறையப் பணம் இருக்கு..... கொட்டி வைத்திருக்கிறார்...! ஆனா, எனக்கு மட்டும் புதுகவுன் வாங்கித் தரமாட்டேன் என்கிறார்!'' என்றாள்.

போலீஸ் அதிகாரி மனமிரங்கி, ''எங்கே உங்க வீட்டைக் காட்டு. அப்பாவிடம் சொல்லி நான் கவுன் வாங்கித்தர ஏற்பாடு செய்கிறேன்'' என்றார்.

வீட்டைக் காண்பித்தாள் சிறுமி. தந்தையோடு ஒரு பெரிய தோட்டு அடிக்கும் கும்பலே பிடிபட்டது.

ஆதாரம்: ''ரிம்மத்'' — தகவல்: ப. கந்தசாமி.





என்னு ஊருக்கு ஊரு.... பாஸ், நம்பர் ரிங்கிங்.''

கணேஷ் டெலிபோனை வாங்கி ''ஹலோ மே ஐ ஸ்பீக் டு மிஸஸ் ஜமுனுசிங்!'' என்றான்.

கொஞ்ச நேரம். ''ஜஸ் வெய்ட்'' என்றான்.

வஸந்த் அவனை ஆச்சரியத்துடன் பார்த்து ''ஜமுனுசிங்? அவங்க நம்பர் தாமோதர் லிஸ்ட்டிலேயா? எப்படி பாஸ்?''

''அவங்க வீட்டுக்குப் போயிருந்த போது நீ ஜமுனுவையே பார்த்துக்கிட்டு இருந்தே. நான் டெலிபோன் நம்பரை நோட் பண்ணிக்கிட்டு இருந்தேன். பார்வைல தான் வித்தியாசம்.''

''ஆனு புரியலே பாஸ்! அந்த நம்பர் இவன் டயரியில எப்படி?''

''எப்படி? யோசி! அதுக்குள்ள ராத்திரி காரை எடுத்துக்கிட்டு வேலூர் போய் வந்துரு!''

''என்னது?''

''நாளைக்கு மத்தியானத்துக்குள்ள வந்துரலாம்!''

''எதுக்கு?''

''இந்த ஆக்ஸிடெண்டை விசாரிச்ச எஸ். பியைப் பார்த்து அந்த பஸ்ல போன பாசஞ்சர்களோட லிஸ்ட்டு வெச்சிருப்பார். அதனுடைய போட்டோ காப்பி வேணும்!''

''பாஸ் சத்தியமா புரியலே. பயங்கர வேகத்துல திங்க் பண்றீங்க!''

''மிஸ்டர் வஸந்த் நீ என்ன நினைக்கிறே? தாமோதருக்கு என்ன ஆயிருக்கும்னு சொல்லு. தப்பா இருந்தாலும் பரவாயில்லே சொல்லு...''

''பங்களூர்ல இருந்து கால் வந்திருக்கு அவனுக்கு!''

வஸந்த் கணேஷை சந்தேகமாய்ப் பார்க்க ''மேலே சொல்லு'' என்றான்.

''பங்களூர்ல தெரிஞ்ச பொண்ணு யாரோ இருந்திருக்கணும். என்னு ஸைப்பில விசாரிச்சதில....

''ஓக்கே. பங்களூர்ல அவனை யாராவது கூப்பிடறதுக்கு சாத்தியக் கூறு உண்டு. நான் மறுக்கலே மேலே.''

''போன் கால் வந்தது. வாத்தியார் அவசரமாப் புறப்பட்டு ஜமுனு டூரிஸ்ட் பஸ்ல போயிருக்கார். பஸ் விபத்தில மாட்டிக்கிட்டு இருக்கு...''

''குட்! ஆரம்பத்தில இருந்து பார்க்கலாம். பிரசன்னு. அதான் தங்கை சொன்னதை எவ்வளவு தூரம் கவனிச்ச பார்க்கலாம். புறப்படறப்ப அவங்க என்ன செஞ்சுக்கிட்டு இருந்தாங்க?''

''டி. வி. பார்த்துக்கிட்டு...''

''என்ன ப்ரோகிராம்?''

''ஒடிஸ்ஸி நடனம்! அதைக் கலாட்டாப் பண்ணிக்கிட்டு இருந்தாங்களாம்!''

''வெரிகுட் நல்ல ஞாபகம். விபத்து என்னிக்கு நடந்தது?''

''மார்ச் இருபத்தேழு.''

''மார்ச் இருபத்தேழு பேப்பரைப்பாரு.''

கணேஷ் அவன் மேல் பழைய பேப்பரை எறிய வஸந்த் ''பாஸ் நீங்க எந்த பேட்டைல ஒதுங்கறீங்கன்னே தெரியலையே. பேப்பர்ல இருபத்தெட்டாந்தேதிதானே விபத்தைப் பற்றிச் செய்தி வரும்?''

''முட்டாள் இருபத்தேழு டி. வி. ப்ரோக்ராமைப் பாரு! ஒடிஸ்ஸி நடனம் இருபத்தேழாந்தேதி இரவு பத்திலிருந்து பத்தரை வரைக்கும் நேஷனல் ப்ரோக்ராம் ஆஃப் டான்ஸ்! செவ்வாய்க்கிழமை பஸ்ஸு புறப்பட்டது எப்ப?''

''ஒம்பதரைக்கு!''

''என்ன சொல்றே!''

வஸந்த் நெற்றியைச் சுருக்கிக்கொண்டு ''ஒருவேளை பஸ்ஸை பூந்தமல்லியில புடிச்சானு அவசரத்தில வழியில நிறுத்தி ஏறிக்கிட்டானு?''

''சரி! அது ஒரு சாத்தியம். வேற ஏதாவது இருக்கா?''

''அல்லது அவன் அந்தபஸ்ல போகவே இல்லே! எப்டி பாஸ்? அவன் பாடியை விபத்திலருந்து எக்ஸ்ட்ரிகேட் பண்ணியிரு...'' வஸந்த் திடீர் என்று பல்பு போட்டாற்போல் பிரகாசமாகி, ''ஓ பாஸ்! நீங்க சொல்றது புரியுறாப்பல இருக்குது. அதான் டெலிபோன் நம்பரா? பிரிலியண்ட்!''

''இல்லே இன்னும் இல்லே! இது ஒரு நிழல்தான். அந்த டெலிபோன் பட்டியலில் ஜமுனுசிங்குடைய நம்பர் இருக்கிறது ஒரு விதமான லாங் ஷாட் தான். பிரயாணிகள் பட்டியலே வேலூர்ல இருந்து பெறுத வரைக்கும் நாம ஏதும் அவசரப்பட்டு முடிவெடுத்துடக் கூடாது'' என்றான்.

''அப்ப இப்ப?''

''நான் நிம்மதியா தூங்கப் போறேன். நீ என்ன பண்றே, காரை எடுத்துக்கிட்டு...''

''அய்யோ தூக்கம் போச்சா?''

---



''தயவு செய்து காசுகள் போடாதீர்; அவை நெருப்புக் கோழியின் உயிரை விழுங்கி விடும்!''

ஆஸ்திரேலியாவில் உள்ள மிருகக் காட்சி சாலை ஒன்றில் நெருப்புக் கோழிகள் உள்ள பகுதியில் மேற்கண்ட அறிவிப்பைக் காணலாம்.

இந்த அறிவிப்புக்குக் காரணம்?

காசுகளை நெருப்புக் கோழி விழுங்குவதை மக்கள் வேடிக்கை பார்த்தனர். திடீரென்று இறந்து விட்ட ஒரு நெருப்புக் கோழியை ஆய்வுக்காக அறுத்துப் பார்த்த டாக்டர்கள், அதன் வயிற்றில் 16 காசுகள் இருந்ததையும், அவை ஏற்படுத்திய ரணங்கள் தான் மரணத்துக்குக் காரணம் என்பதையும் கண்டுபிடித்தனர்!

–ப. கந்தசாமி



''நாளைக்கு மத்தியானம் சேர்த்துவெச்சுத் தூங்கிக்கோயேன். உனக்கே சுவாரஸ்யமா இல்லே?''

''இருக்கு ஆனா!''

'இப்ப ''ஆனா' எதுவும் வேண்டாம். ஃபாக்ட்ஸ் கலெக்ட் பண்ணிக்கலாம். அதுக்கப்புறம் இந்த ஆனால் தியரி எல்லாம் வெச்சுக்கலாம்.''

''கார்ல பெட்ரோல் இருக்கா?''

## 10

வஸந்த் மறுதினம் வேலூர் போய் விட்டுத் திரும்ப மாலை நான்கு மணியாகி விட்டது. கணேஷ் பதற்றமில்லாமல் 'ஹிந்து'வில் க்ராஸ்வேர்டு போட்டுக்கொண்டிருந்தான். வஸந்த் வந்து உள்ளே நுழைந்து ஜாக்கெட்டைக் கழற்றிவிட்டு அவனைப் பார்த்து, ''நாய் மாதிரி அல்லாடிட்டு வரேன். க்ராஸ்வேர்டா? சில பேருக்கு மச்சம் பாஸ்'' என்றான்.

''என்ன அந்த லிஸ்ட்டைப் பார்த்தியா அதில தாமோதர் பேர் இல்லேதானே?''

''அதான் இல்லே! ஸ்பஷ்டமா அவன் பேரும் இருக்குது. எஸ். பி. ரொம்ப தகராறு பண்ணிட்டார். ராஜேந்திரன் பேரை உபயோகித்தாயிடுத்து. அவர் நான் புருடா விடறேன்னு ராஜேந்திரனுக்கு போன் பண்ணியே கேட்டுட்டார். நல்லவேளை கணேஷை எனக்குத் தெரியும். தாராளமாகக் காட்டலாம்னுட்டாரு. இப்ப போன் பண்ணுறும் பண்ணுவார்.''

''மத்தியானமே போன் பண்ணிட்டாரு. நீ போனதைச் சொல்லு. 'போட்டோஸ்டேட்' எடுத்துக்கிட்டு வந்தியா?''

''வேலூர்ல வீடியோ நிறைய இருக்கு. ஜெராக்ஸைக் கண்டுபிடிக்கிறதுக்குள்ள தாவு தீர்ந்து போச்சு''.

''எடுத்துட்டு வந்தியா, இல்லேயா?''

''ஆச்சு பாஸ் பாருங்க...''

கணேஷ் அந்தப் பட்டியலை வாங்கிப் பார்த்தான். தாமோதரன் பெயர் எட்டாவதாக இருந்தது இனிஷியல் இல்லாமல் வெறும் தாமோதர். ''ரெண்டு மூணு பேர் லிஸ்ட் தயாரிச்சிருக்காங்க போல, கையெழுத்தைப் பாருங்க. ஆனா பாஸ் நீங்க நினைச்சது நடக்கலே. நீங்க லிஸ்ட்டில இவன் பேர் இருக்காதுன்னு நினைச்சீங்க இல்லேயா?''

கணேஷ் ''புரியலே'' என்றான். ''லிஸ்ட்டில பேர் இருக்கு. பின்ன டயமிங் உதைக்குதே!''

''ஒன்று அன்னைக்கு பஸ் லேட்டாப் புறப்பட்டிருக்கணும், இல்லே...''

''இல்லே?''

''வேற எதுவும் சொல்லத் தெரியலே. விடுங்க பாஸ். இது ஒரு சின்ன முரண்பாடு. ஏதாவது காரணம் இருந்துதான் ஆகணும். அவன் பஸ்லதான் போயிருக்கான். சந்தேகமே இல்லே. எஸ். பி. சொன்னார். அவர்தான் போய்ப் பார்த்தாராம். பாடிங்கள்ளாம் ரோடோரத்தில கிடந்ததாம். ஒவ்வொண்ணா அப்புறப்படுத்தி அனுப்பினாராம் ஃபண்டு ஆஸ்பத்திரிக்கு.''

''வஸந்த் அந்த பஸ் ஒம்பதரைக்கு கிளம்பினதா யார் சொன்னாங்க?''

''புக்கிங் ஆபீஸ்ல இருந்த அந்த குமாஸ்தா... என்னவோ அய்யங்கார் பேரு. சினிமா ரசிகர். பொதுவா சொன்னாரு. எங்க பஸ்ஸு ஒருநாள் கூட தாமதமா கிளம்பணதில்லே. என்னா ஒரூர்ல இன்னொரு டெ ட்ரிப்பு இருக்குன்னாரு...''

''அன்னிக்குக் கிளம்பின நேரத்தைக் குறிச்சு வெச்சிருப்பாங்களோ?''

''அப்படி ஒண்ணும் சொல்லலே.''

''அதைக் கொஞ்சம் விசாரிச்சுடேன்.''

''அய்யோ என்ன பாஸ் விடமாட்டீங்க போலிருக்கு!''

''த பார், எனக்கு விதியில நம்பிக்கை இல்லே. அன்னைக்கு அவனை அழைச்சது விதியில்லே.''

''விதி தான். அவன் எப்படிச் செத்திருந்தாலும் அவனை விதிதான் அழைச்சிருக்கு!''

''ஒரே ஒரு முறை அந்த ஜமுனாசிங்கைப் பார்த்துட்டு இந்த கேஸை க்ளோஸ் பண்ணிடலாம். நீ இரு. ரொம்ப டயர்டா இருப்பே. நான் போய்ப் பார்த்துட்டு...''

''டயர்டும் இல்லே. ஒரு புடலங்காயும் இல்லே. நானும் வரேன். இப்ப இங்க தனியா என்ன செய்யப் போறேன்.''

''திருக்குறள் படிக்கிறது.''

''அங்க வந்து படிக்கிறேனே!''

வஸந்த்துக்குப் பெருத்த ஏமாற்றமாக ஜமுனாசிங் வீட்டில் இல்லே. ''பெரியவருதான் இருக்காருங்க'' என்றான் வேலைக்காரன்.

''அவரைப் பார்க்க முடியுமா?'' என்றான் கணேஷ்.

''தூங்கறாருங்களே.''

சிங் மாடிப்படிகளில் இறங்கி வந்துகொண்டே, ''பொய் சொல்லாதே. நான் முழிச்சுக்கிட்டுத்தான் இருக்கேன். மிஸ்டர் கணேஷ் என்ன விஷயம்?''

---

'அர்ஜென்டைனா'வைச் சேர்ந்த 'ஜான் மார்ஷல்' என்பவர் ஒரு சிகரெட் கம்பெனிக்கு, ''நான் தங்கள் நிறுவனம் தயாரிக்கும் சிகரெட்டை விரும்பி அதிகமாக உபயோகித்ததினால் தற்போது எனக்கு இருதய நோய் வந்துள்ளது. இந்நோய் முழுதும் குணமாக ஆகும் செலவைத் தாங்களே ஏற்க வேண்டும். இல்லையெனில் உங்கள் சிகரெட்டினால் எனக்கு வந்த நோயினைப் பற்றி நான் எல்லாப் பத்திரிகைகளிலும் விளம்பரம் செய்ய நேரிடும்'' என்று கடிதம் எழுதியிருந்தார். முடிவு, அவருடைய கோரிக்கையை அந்த சிகரெட் கம்பெனி ஏற்றுக் கொண்டது.

—ஜா. ரவி.





''உங்க மிஸஸைச் சந்திக்க வந்தோம்.''

''எதுபற்றி?''

''அதாங்க அந்த தாமோதர், விபத்தில இறந்து போனாரே!''

''இன்னும் முடியலையா? அட ராமா! என் மனைவி எங்க வந்தா?''

''உங்க மனைவி டென்னிஸ் கிளப்புல வியூபி கிளப்பில மெம்பரா இல்லை? அதே கிளப்பில இந்த தாமோதர் அஸிஸ்டெண்ட் ஸ்டூவர்டாய் இருந்திருக்கான். உங்க வீட்டு டெலிபோன் நம்பர் அவன் டயரியில இருந்தது.''

''இருந்தா? வாட் ஆர் யூ இம்ப்ளையிங்?''

''நத்திங்! உங்க மனைவிக்கு அவனைத் தெரிஞ்சிருக்கலாமோன்னு ஒரு சின்னதா...''

''ஸோ வாட்? என்ன கணேஷ், ஏதாவது புதுசா உண்டா? அவன் விபத்தில செத்துப் போனான். எங்க பஸ் விபத்து.வி ஆர் ஸாரி! கூடுமானவரை காம்பன்சேஷன்பண்ணப்பார்க்கிறோம். தேர் எண்ட்ஸ் தி மாட்டர்!''

''ஸார் அன்னைக்கு உங்க பஸ் எத்தனை மணிக்குக் கிளம்பிச்சு?''

''நைன் தர்ட்டிக்குத்தான்.''

''எப்படி அவ்வளவு ஷ்யூரா சொல்றீங்க?''

''நான்தானய்யா அனுப்பிச்சேன்! நானே அதில போறதா இருந்துதானே போஸ்ட்போன் ஆயி...'' அப்புறம் லாக் புக்ல எண்ட்ரி இருக்கும்...

''அப்ப தாமோதர் அந்த பஸ்ல போயிருக்க முடியாது.''

''வாட் நான்சென்ஸ்'' என்றார் அவர். கணேஷைப் பார்த்து பொறுமையில்லாமல், ''அடிபட்டு வேலூர் ரோட்டோரத்தில கிடந்தான். லிஸ்ட்ல பேர் இருக்கு!''

''அப்ப அந்த தாமோதரும்,இந்த தாமோதரும், அதாவது பிரசன்னாவுடைய அண்ணன் தாமோதரும் வேற வேற ஆளாயிருக்கணும்!''

''அவங்கதான் வந்து பார்த்தாங்க.அடையாளம் கண்டு கொண்டாங்களே!''

''எங்கேயோ உதைக்குது ஸார் இந்த கேஸ். நீங்க ஒத்துழைச்சீங்களானா கண்டுபிடிக்கலாம்!''

''என்ன பண்ணணும் சொல்லுங்க!''

''உண்மையைச் சொல்லிடுங்க'' என்றான் கணேஷ்!

''வாட் டு யூ மீன் கணேஷ்!''

''ஒண்ணு புறப்பட்ட சமயம் தப்பு. ஒம்பதரைக்கு...வெய்ட் எ மினிட்! ஸார் நான் ஒண்ணு சொல்வேன். நீங்க கோவிக்காமக் கேப்பீங்களா?''

''ஐ ஹேவ் நோ டைம். ராத்திரி வாங்க. சொல்லுங்க. என் மனைவியையும் சந்திச்சு... தாராளமாக் கேட்டுக்கங்க...''

''ஓ எஸ்! ராத்திரியே வரோம். அப்படின்னு நீங்க தாமோதரைக் கொல்லலைங்கறீங்க இல்லையா?''

புறப்பட்டவனை அவர் ''வாட்!'' என்று கூவியது தடுத்து நிறுத்தியது. ''இரு இரு! என்ன சொன்னே?''

''ஒண்ணுமில்லே!''

''என்னய்யா! உளறிட்டு நீ பாட்டுக்குப் புறப்பட்டுப் போயிட்டிருக்கே. வாட் டு யூ மீன் பை தட் இன்ஸினுவேஷன்?''

'வஸந்த் கணேஷை பிரமிப்புடன் பார்த்திருக்க...''இல்லை ஸார்! கோவிச்சுக்காதீங்க. ஒரு சாத்தியக் கூறு! ஆல்டர்நேட் தியரியோ அவ்வளவுதான். வரேன்.''

''இரு. இரு. என்ன சொன்னே நீ? சரியாச் சொல்லித் தொலை! நான் வந்து? தாமோதரை?''

''இல்லை ஸார். சும்மா உல்வாக்கட்டிக்கு! இவர் இமர்னு இப்படித்தான் வைல்டா ஏதாவது சொல்வார். மறந்துருங்க. நிம்மதியாத் தூங்குங்க. நாங்க வரோம்'' என்றான் வஸந்த்.

சிங் அவர்களை வழிமறித்தார். ''இரு. நீ சொல்ல வந்ததைச் சொல்லிட்டுத்தான் போகணும்? என்ன பைத்தியக்காரத்தனமாக இருக்கு. ஏதாவது உளறுவியாம். சரியா என்னன்னு சொல்ல மாட்டியாம்.''

கணேஷ் வஸந்த்தைப் பார்த்தான்.

''உக்காரு'' என்று அதட்டினார்.

கணேஷ் உட்கார்ந்து கொண்டு, ''ஸார், நான் சொல்றது ஒரு விதத்துல ஒரு மாதிரி ஊகம்தான்; தியரி தான். இது தப்புன்னு நிரூபிக்க வேண்டியது கூட உங்கப்பொறுப்பு இல்லை. எம்மேல கோவிச்சுக்கக் கூடாது. கோவிச்சுக்கலைன்னு சொல்றேன். ஸிரிக்காதீங்க'' என்றான்.

''சொல்லுங்க.''

''விபத்து நடந்த அன்னைக்கு நீங்க ராத்திரி அதே பஸ்ல கிளம்ப இருந்தீங்க. அங்க போனீங்க. கடைசி சமயத்தில மறுநாள் எங்கேஜ்மெண்ட் ஞாபகம் வந்து நீங்க திரும்பி வீட்டுக்குப் போனீங்க.''

''ம் சொல்லுங்க!'' வேலைக்காரன் கொண்டு வந்த சர்பத்தை யாரும் கவனிக்கவில்லை.

''திரும்பி வந்ததும் ஒரு காட்சியைப் பார்க்கிறீங்க. ஸாரி, நான் படு தப்பா இருக்கலாம்! இதில ஒரு ஊகம்தான். மிஸ்டேக் பண்ணிக்கக் கூடாது...''

''இல்லை.''

''உங்க மனைவியையும் தாமோதரையும் பார்க்கறீங்க! தாமோதர் கொஞ்சம் வசீகரமான ஆசாமி. பெண்களைக் கவரக்கூடியவன். உங்க மனைவி 'வி.யூ.பி.யில மெம்பர், டென்னிஸ் மெம்பர். தாமோதரை சந்திக்கச் சந்தர்ப்பம் இருந்திருக்கலாம். அவன் பேச்சில, இளமையில, யூ ஃபாலோ வாட் ஐ மீன்! நீங்க ஊருக்குப் போறீங்கன்னு பத்துப் பத்தரை மணிக்கு உங்க மனைவியே அவனை டெலிபோன் மூலம் கூப்பிட்டிருக்கலாம். ஸார் நான் சொல்றது அத்தனையும் அபத்தமா இருக்கலாம்! மன்னிச்சுக்கங்க! தொடரட்டுமா? நிறுத்திரட்டுமா?''

''சொல்லுங்க.''

''அவங்களை நீங்க படுக்கையில பாக்கறீங்க. உங்க உள்ளம் கொதிக்கிறது! என்ன செய்யறீங்க? அந்த ஆத்திரத்துல என்ன வேணு செய்திருக்கலாம் நீங்க. தோட்டத்தில அவன் வெளிய வரக் காத்திருந்து மண்டைமேல ஒரே போடு! தோட்டத்தில



"அவனுக்கு ஒன்பது
வயது. உலகிலேயே
மிகச் சிறந்த
ஆல்ரவுண்டராக
வேண்டுமாம். அது
நிச்சயம் நடக்கும்
என்று நம்புகிறேன்."

# போர்ன்விடாவின் இனிமைக் காலம்

போர்ன்விடா அளித்தவரை பாச மனங்கள் நேசத்தோடு நினைத்து மகிழும் ஒருநாள்!

வளரும் குழந்தைகள் வேறு எந்த மால்ட்டட் பானங்களையும்விட போர்ன்விடாவை விரும்புவதேன்?

போர்ன்விடா அருந்தி வளர்ந்த இரு தலைமுறையினர் வெளிப்படையாகவே கூறுகிறார்கள்.

"என்னுடைய குழந்தைகளுக்கு போர்ன்விடா தவிர வேறு எதுவும் உகந்தது அல்ல."

குழந்தைகளைக் கேளுங்கள்
பெற்றோர்களைக் கேளுங்கள்
உங்களையே கேட்டுக் கொள்ளுங்கள்

அதில்... உற்சாகம் துள்ளும் சுவை மட்டுமல்ல. காட்பரியின் பிரபல பெயர் மட்டுமல்ல... அவற்றைவிட அதிகமோ அதிகம்!

அதுதான் போர்ன்விடா! அதோடு வளருங்கள்.

காட்பரீஸ்
**போர்ன்விடா**
நல்ல வளர்ச்சி, போர்ன்விடா பயிற்சி.




OBM/2772-TAM



எத்தனை ஆயுதம் இருக்குது? அந்த அதிக உணர்ச்சிகரமான சமயத்தில அவனை அடிச்ச அடியில அவன் மண்டை உடைஞ்சு இராக் ஆயி ரத்தம் வடிஞ்சு அவன் அங்கேயே பிராணனை விட்டுட்டான். உடலை என்ன செய்யறதுன்னு... வஸந்த் கண்டின்யூ...!''

''நானு பாஸ்!'' என்றான் வஸந்த் இடுக்கிட்டு. இப்போது சிங் மவுனமாகவே இருந்தார்.

''ஆமாம் இத்தனை நேரம் உனக்குக் கிளியரா இருக்கணுமே?''

''சொல்றேன்! அப்புறம் என்ன பண்ணீங்க அந்த ஆளுக்கு கபால மோட்சம். பாடியை வெச்சுக்கிட்டு என்ன பண்றதுன்னு தெரியாம திருதிருன்னு விழிச்சீங்க. சரி, ராத்திரி ஆரவாரம் அடங்கினதும் தோட்டத்துலேயே புதைச்சிடலாம்னு படுக்கைக்கு போயி விழுந்திட்டீங்க. உங்க மனைவி இங்க நடந்ததெல்லாம் தெரியாம தூங்கிக்கிட்டு இருக்காங்க. இல்லை தெரிஞ்சிருக்கலாம்...! ராத்திரி உங்களுக்கு எதிர்பாராத நியூஸ் கிடைக்குது! உங்க பஸ் வேலூர் தாண்டி ஆக்ஸிடெண்ட் ஆயிட்டதாகவும் பத்து பதினஞ்சு பேர் இறந்துபோயிட்டதாகவும், உங்களை உடனே வரச் சொல்லி. ஒரு வரப்பிரசாதம் மாதிரி ஆக்ஸிடெண்ட்! என்ன பண்றீங்க? தாமோதரோட பாடியை கார் டிக்கியில போட்டுக்கிட்டு ஆபீசுக்குப் போயி பாசஞ்சர் லிஸ்ட்டை வாங்கி எடுத்துக்கிட்டு...''

''நான் சொல்றேன்!'' சிங் மெஷின் போலத் தொடர்ந்தார்.

''அந்த பாசஞ்சர் லிஸ்ட்டில அவசரமா தாமோதர் பேரை எழுதிக்கிட்டேன். எட்டாம் நம்பர் சீட்டுக்கு எதிராக் காலியாய் இருந்த இடத்தில இவன் பெயரை நிரப்பினேன். அங்கே ராத்திரி போனேன். ஸ்தலத்தில அந்த இருட்டில போலீஸ் ஆம்புலன்ஸ் கொண்டு வர்றதுக்குப் போயிருந்த போது அந்த உடல்களோட இந்தக் கிராதகனுடைய உடலையும் சேர்த்துர்றது எனக்கு ரொம்பச்சுலபமாயிருந்ததுகணேஷ்!'' கணேஷ் ஆச்சரியத்துடன் 'சிங்கை நிமிர்ந்து பார்த்தான். அவர் கண்களில் கண்ணீர் இரையிட்டிருந்தது.

''அந்தக் கொடுமை யாருக்கும் வேண்டாம் கணேஷ். கட்டின பெண்டாட்டியை இன்னொருவன் அணைப்பில் பார்க்கிற கொடுமை! எனக்கு வெறியில ஒருகணம் பைத்தியம் தான் புடிச்சுருச்சு. உங்களோட ஊக சக்தியை வியக்கிறேன். நீங்க சொன்ன மாதிரிதான் நடந்தது. சின்னச் சின்ன டீடெய்ல்ஸ்லதான் வித்தியாசம்! என்னுடைய நிலைமைல இருந்தா நீங்க என்ன செஞ்சிருப்பீங்க, சொல்லுங்க?''

''கல்யாணம் ஆகல்லீங்க!'' என்றான் கணேஷ்.

''வேண்டாங்க செய்யாதீங்க. அதுவும் என்னைப் போல லேட்டா! இந்த வயசில வேண்டாங்க, ரெண்டாம் கல்யாணம் வேண்டாங்க! அதுவும் அழகான ஏழைப்பெண்! வேண்டாங்க! நரகம் அது! டார்லிங், டார்லிங்குனு அவளுக்காக உருகி லட்சக் கணக்கில செலவழிச்சு... டார்லிங், டார்லிங்குனு பொய்களை நம்பி... என்கிட்ட எத்தனை அன்பா, பாசமா இருக்கறப்பல பாசாங்கு செஞ்சா! என்ன ஒரு அவமானம்!'' சிங் பைக்குள்ளிருந்து கைக்குட்டை எடுத்து சிவந்த கண்களின் பிரவாகத்தைத்துடைத்துக் கொண்டார்.

கணேஷ் மவுனமாக எதிரே ஜமுனுசிங்கின் போட்டோவின்நாட்டியச்சிரிப்பைப்பார்த்துக் கொண்டிருந்தான்.

''கணேஷ்! நான் நினைச்சேன்! இது ஒரு நியர் பர்ஃபெக்ட் க்ரைம்'னு. யாராலயும் கண்டுபிடிக்க முடியாது. ''போஸ்ட்மார்ட்டம் ஹெட் இன்ஜுரிதான் காட்டும்! லிஸ்ட்டில பேரு. ஆக்ஸிடெண்ட் லிக்டிம்! மைகாட்! எப்படி சந்தேகம் வந்தது உங்களுக்கு? யாருக்குமே தெரியாதுன்னு...''

''விதிங்க'' என்றான் வஸந்த்.

''விதியா?''

''ஆமா. அந்த தங்கச்சி வந்து 'தாமோதரை விதிதான் பங்களூருக்கு அழைச்சுதுன்னு நம்ப முடியலை. எதுக்காக பங்களூர் போறான்னு கண்டுபிடிச்சு சொல்லுங்கன்னுது. அதில ஆரம்பிச்சது வினை...''

''மிஸ்டர் கணேஷ். நீங்க என்ன செய்யப் போறதா உத்தேசம்?'' என்றார் கண்களில் கலவரத்துடன்.

''என்ன பாஸ்?'' என்றான் வஸந்த். கணேஷ் சற்று நேரம் யோசித்தான். அந்தப் போட்டோவைப் பார்த்துக் கொண்டான்.

''மிஸ்டர் சிங்! ஸாரி நான் கண்டுபிடிச்சதை, என் சந்தேகங்களைப் போலீஸுக்குச் சொல்ல வேண்டியது என் கடமை! அதை நான் மீற முடியாது... ஆனா..?''

''ஆனா?''

''அவங்க உங்களைக் கைது பண்ணத் தீர்மானிச்சாங்கன்னு ட்ரையல் நடக்கறப்ப உங்க வழக்கை நாங்க எடுத்துக்கிட்டு வாதாடறோம்'' என்றான் வஸந்த். கணேஷ் வஸந்த்தைச் சற்று நேரம் முறைத்துப் பார்த்து விட்டு மெல்லப் புன்னகைத்தான்.

(முற்றும்)

---



மன்னன் பதினெட்டாம் லூயி எழுதிய புத்தகம் ஒன்றைப் பாரீஸின் பிரபல பத்திரிகை ஒன்றுக்கு விமரிசனத்திற்காக அனுப்பி வைத்தார்கள். விமரிசனத்தை இரண்டே வாக்கியங்களில் முடித்திருந்தது பத்திரிகை.

''இப்புத்தகம் மன்னரால் எழுதப்பட்டிருந்தால் அது விமரிசனத்திற்கு அப்பாற்பட்டது.

''அவரால் எழுதப்படவில்லையென்றால் விமரிசனத்திற்கே லாயக்கற்றது!''

— ஜா. ரவி.

# தாவணிக் கவிதை

தேவிபாலா

"ஜுலீர்!"

கையிலிருந்த கண்ணாடி டம்ளர் சுவரில் மோதி, பொடிப் பொடியாக நொறுங்கிப் போனது.

''இதனால யாருக்கு லாபம் முரளி?''

கேள்வி கேட்ட பிரபுவை ஆத்திரத்தோடு முறைத்தான் முரளி.

''எனக்கொரு வடிகால்! என்னோட இயலாமையை வெளிப்படுத்திக்க வேறு மார்க்கம் இல்லே... அனு என்னை ஏமாத்திட்டா, நெருங்கி வந்து நேசமா நடந்துக்கிட்டு நெஞ்சைக் குறி பார்த்துச் சுட்டுட்டா.... டாமிட்!''

''நீ இப்படி. குமைஞ்சு. குமைஞ்சு சாகறதை விட நினைச்சதைச் செயல்படுத்து... காதலிச்சவன் கோழையாக மாறிக் கதறிட்டு இருக்கான்னு ஒரு கசப்பான சரித்திரத்தை ஏற்படுத்தாதே!''

''நான் என்ன செய்யணும்?''

''தேர் ஆர்... எப்ப அனுவுக்குக் கல்யாணம்?''

''நாளைக்கு!''

''நேராப் போ... நீதான் அவளோட காதலன்னு தெரியப்படுத்திக்கோ... நீ எழுதின தாவணிக் கவிதைகளை எதுகை. மோனையோட படி... நீ துடிக்கிற துடிப்பை அவளும் கொஞ்சம் அனுபவிக்கட்டும்... ஏமாத்தற செய்கைக்கு என்ன பரிசுன்னு பெண் ஜென்மம் கொஞ்சம் அனுபவிச்சுப் பார்க்கணும். நான் வரட்டுமா?''

முரளியின் முகம் இறுகிக் கிடந்தது... நரம்புகள் அத்தனையும் ரகளையாக முகத்தில் சேர்ந்திருந்தது... பற்கள் கடிபடத் தொடங்கி; உதட்டுக்குள்ளே ஒரு குரு க்ஷேத்திரம் துவங்கியிருந்தது.

பிரபு குரூரமாகச் சிரித்துக் கொண்டான்.

''அனு...!''

ஆசையா உன்னைத் தேடி வந்து பேசின காலத்துல நீ என்னை அவமானப்படுத்தியிருக்கே... அழ வைச்சிருக்கே... காதலிக்க விருப்பமில்லேன்னு சொல்லிக் கலங்க வைச்சிருக்கே... உன்னைப் பழி வாங்கணும்.... உன் சந்தோஷத்தைச் சேதப்படுத்திச் சிரிக்கணும்...!''

ஆகாயத்திலுள்ள நட்சத்திரங்களைக் கண்கள் எரிய எரியப் பார்த்துக் கொண்டிருக்கிறான் முரளி...

''நீ எழுதின தாவணிக் கவிதைகளை எதுகை, மோனையோட படி...!''

சட்டென்று எழுந்து உட்கார்ந்து கொள்கிறான்...

''உனக்கு இந்தப் பாவாடை தாவணி தான் அனு ரொம்ப அழகா இருக்கு...!''

''ம்க்கும்! மாடர்ன் டிரஸ் போட எனக்கு ஆசையா இருக்கு...''

''போடறது!''

''உங்களுக்குத் தான் பிடிக்காதே முரளி!''

''அப்பமன்னு, எனக்குப் பிடிக்காத எதையும் நீ செய்ய மாட்டியா?''



''ம்ஹூஉம்!''

''பிடிச்சதை?''

''எது பிடிக்கும்?''

''வி. வெச்சு, குட்டையா கட்டியிருக்கியே. இந்தத் தாவணி... இது ரொம்பப் பிடிக்கும்...''

''அப்புறம்?''

''இந்தச் சின்ன ரவிக்கைக்கும் பாவாடைக்கும் நடுவுல இருக்கற இடுப்பு ரொம்பப் பிடிக்கும்...''

''ச்சீ... கையை எடுங்க .. என்ன அங்கெல்லாம் தொட்டுண்டு...''

......

''கோச்சுட்டீங்களா முரளி... ப்பா.... அதுக்குள்ள மூக்கு சிவந்து போச்சு....''

''எனக்கு அந்த உரிமை கூட இல்லையா?''

''இல்லேன்னு சொல்லலே...'' அவனது கைகளைப் பற்றித் தன் கன்னத்தில வைத்துக் கொள்கிறாள்...

''நம்ம விஷயத்தைப் பத்தி உங்க வீட்டிலே சொன்னியா அனு?''

''உங்களுக்கு இன்னும் வேலை கிடைக்கலே... நான் இன்னும் படிப்பை முடிக்கலே... இந்த ஸ்டேஜ்ல எப்படிப் பேச்சை ஆரம்பிக்கறதுன்னு...''

''ஓ... உன்னை வச்சுக் காப்பாத்த எனக்கு வழியில்லேன்னு...''

''நோ... அதுக்காக நான் சொல்லலே முரளி... என்னைப் பொறுத்த வரைக்கும் பிரச்னையை அந்தக் கோணத்துல நான் பார்த்ததும் இல்லே...''

''எனக்கு வேலை கிடைச்சிட்டா விஷயம் சுலபமாயிடுமா?''

''போவோமா?''

எழுந்து கொண்டார்கள்...

**வீடு** திரும்பி, பிரதான சாலையில் நடந்த, சோடிய வெளிச்சத்தில் பல்லவனைக் கவர்ந்து அனு ஒரு புள்ளியாகித் தேயும் வரை அங்கேயே நின்று கொண்டிருந்தான் முரளி...

அதுதான் கடைசி சந்திப்பு என்பது அவனுக்குத் தெரிய நியாயமில்லைதான்......

ஏதேதோ யோசித்தபடி கால்கள் வலிக்க, வலிக்க நடக்கத் தொடங்கினான்...

மனமும் வலிக்க வலிக்க அழப்போவது அப்போது அவனுக்குத் தெரியாது....

....

எழுந்து விளக்கைப் போட்டவன், தண்ணீரை டம்ளரில் சரித்து மடமடவெனக் குடித்தான்... அந்தக் கல்யாணப் பத்திரிகை மேஜையிலேயே கிடந்தது... அனு Weds ராம்குமார்...

நெஞ்சு எரிந்தது....

**அ**னுவைச் சுற்றிப் பெண்களின் கூட்டம்...

ஏதேதோ கிண்டல்கள்...

அனு செயற்கையான சிரிப்பொன்றை உதட்டில் மாட்டிக் கொண்டிருந்தாள்.

உள்ளம் எரிந்து கொண்டிருந்தது...

நடக்கக் கூடாதது நடந்து கொண்டிருப்பது போல் ஏதோ ஒன்று அவளைக் கஷ்டப்படுத்தியது...

கனவில் நடப்பது போல் காரியங்கள் நிறைவேறி, சங்குக் கழுத்தில் ராம்குமாரின் தாலி சடுதியில் ஏறியது...

அக்னியை வலம் வந்து திரும்பும்போது....

சத்திர வாசலில்...

கண்கள் உறைந்து போனது அனுவுக்கு...

வெள்ளை நிற பைஜாமா, ஜிப்பா....

தோளில் ஜோல்னாப்பை...

முரளியேதான் அது...

துக்கம் நெஞ்சை அடைக்க, சமாளித்துக் கொண்டாள் அனு...

நண்பர்களுக்கெல்லாம் கைகுலுக்கிச் சோர்ந்து போயிருந்தான் ராம்குமார்....

இவர்களை நெருங்கிக் கொண்டிருக்கிறான் முரளி...

சட்டென்று...

ராம்குமாரின் அருகில் நெருங்கிக் காதோடு ஏதோ சொன்னாள் அனு....

அவள் சொல்லச் சொல்ல...

தலையை ஆட்டிக் கொண்டிருந்தான் ராம்...

இதை முரளியும் கவனிக்காமல் இல்லை....

''**சா**ர்! சாப்பிட வாங்க...'' யாரோ ஒருவர் வந்து முரளியை அழைக்க,

''ஸ்வீட் இருக்கா, என்ன ஸ்வீட்?''

இவனை வித்தியாசமாகப் பார்த்தவர், ''பாதாம் அல்வா!'' என்றார்...

''எடுத்து வைங்க... முக்கியமான ஒரு வேலை இருக்கு... முடிச்சுட்டு வந்து சந்தோஷமாச் சாப்பிடறேன்...''

அவர் நகர,

ராம்குமாரை நெருங்கினான் முரளி...

''ஐ'ம் முரளி!''

''க்ளாட் டு மீட் யூ. யாருன்னு சொல்லலியே...!''

''பொண்ணு வீட்டுக்காரன்...''

''குட்! அனுவுக்கு என்ன வேணும்?''

''காதலன்...'' காதோடு கிசுகிசுப்பாகச் சொன்னான். ராம்குமாரின் முகம் சட்டென மாறியது...

''மிஸ்டர் நீங்க...?''




விருத்தாசலத்தில் உள்ள ஒரு காலனியின் பெயர் 'சாம்பார் காலனி'. இதில் மொத்தம் ஏழு வீடுகள் உள்ளன. இந்த வீடுகளுக்கு எண்களுக்குப் பதில் 'கடுகு, உளுந்து, கருவேப்பிலை, சீரகம், மிளகு, துவரை, முருங்கைக்காய்' என விநோதமாகப் பெயர்கள் சூட்டப்பட்டுள்ளன.

—தகவல்: மின்னல் வளவன்

எவண்டாவன்?.. முகூர்த்த நேரத்துலே கல்கி விடுமுறை மலரைக் கொண்டாந்து போட்டவன்?

கல்கி விடுமுறை மலர்

# கல்கி விடுமுறை மலர்-84

## வண்ணக் களஞ்சியமாக உருவாகிறது

உள்ளூர் ஏஜெண்டிடம் உடனே பதிவு செய்துகொள்ளவும்
தனிப்பிரதி விலை ரூ. 10. பதிவுத் தபால் செலவு ரூ. 4

மே 13-ம் தேதி கல்கி இதழுடன் எல்லா ஏஜெண்டு களிடமும் கிடைக்கும்.

மானேஜர், கல்கி,
கிண்டி, சென்னை-600 032.

''ரிலாக்ஸ் மிஸ்டர் ராம்... சேலைல இருக்கற உங்க அனுவைத் தாவணில கவிதையாப் படிச்சவன் நான்... வரிவரியா சொல்லட்டுமா? மயிலாப்பூர்ல மரபுக்கவிதையா இருந்தவளை புகாரில வச்சு புதுக் கவிதையா மாத்தின வித்தையைச் சொல்லட்டுமா...?''

''தனியா எங்கூட வாங்க...''

''ஓ... தாராளமா... அதுக்குத்தானே நான் வந்திருக்கேன்!'' முரளி விறைப்பாக நடந்தான்.

''நீங்க சொல்றதெல்லாம் நிஜம்தானா?''

''எவிடன்ஸ் வேணுமா? கடிதங்களைப் படிச்சாப் போதுமா? இல்லே போட்டோவைப் பார்க்கணுமா? எப்படி வசதி?''

''ஓ. நோ... அந்தக் கண்றாவி எல்லாம் நான் பார்க்க வேணாம்... அனுகிட்ட இப்படியொரு ரகசியம் இருக்கும்னு நான் நினைக்கவே இல்லே... நான் ஏமாந்துட்டேன்...''

''அந்தத் 'துடிப்புத்'தான் என்னை இங்கே கொண்டு வந்தது... ரெண்டு பேரையும் அனு ஏமாத்திட்டா... முறைதான் வேறே...''

''சரி, முரளி, என்ன வேணும் உங்களுக்கு இப்ப? நான் ஏதாவது உதவ முடியுமா?''

''மன்னிக்கணும்! இந்தக் கேள்விக்கு எந்த அர்த்தமும் இல்லே... முடியப்போற பாட்டுக்கு முகாரி சொல்ல நான் வந்தேன்... அவ்வளவுதான்!''

''அனுவை நான் சும்மா விடமாட்டேன்...''

'அது போதும் எனக்கு...' மனத்துக்குள் நினைத்துக் கொண்ட முரளி, சொல்லிக் கொள்ளாமல் நகர்ந்தான்...

''சார் பாதாம் அல்வா?'' எதிரே அவர் வர, சிரித்துக் கொண்டே அவருடன் நடந்தான்...

**அ**ப்பா அதிர்ந்து போனார்...

''என்ன டாக்டர் சொல்றீங்க?''

''இந்தப் பெண்ணுக்கு ஹார்ட்லச் சின்னதா ஒரு குண்டூசி முனைக்கும் சன்னமா ஒரு ஓட்டை விழுந்திருக்கு...''

''அதனாலே...''

''உயிருக்கு ஆபத்து எதுவும் வர வாய்ப்பில்லே. ப்ரொவைடட்...''

''ஏன் டாக்டர் நிறுத்திட்டீங்க...?''

''அதிர்வுகள் எதுவும் கூடாது... உடல் எந்த நேரமும் ஒரே நிலைல இருக்கணும்.... டென்ஷன் கூடவே கூடாது... எல்லாத்துக்கும் மேல, கண்டிப்பா கல்யாணம் கூடாது...''

மறைவில் இருந்த அனு மடிந்து உட்கார்ந்தாள்...

''உடல் தொடர்பு டென்ஷனுக்கு வழி வகுக்கும்... அதனாலே உயிருக்கே ஆபத்து...''

''இது சாத்தியமா டாக்டர்!''

''வேற வழியில்லே...'' டாக்டர் ஏதோ சொல்ல வாயெடுப்பதற்குள் அந்த இளைஞன் உள்ளே நுழைந்தான்...

''ஹலோ ராம்... ஆர் யூ ஆல் ரைட் நௌ?''

''ஆப்ஸல்யூட்லி டாக்டர்...''

''சாத்தியமான்னு கேட்டீங்களே சார்... இந்த ராம்குமாரும் அனு மாதிரி ஒரு பேஷண்ட்தான்... கொஞ்சம வேற ரகம்... ஆனா ட்ரீட்மெண்ட சேம் கேஸ்...''

அனு ஆவலோடு அவனைப் பார்த்தாள்...

அப்படி ஆரம்பித்ததுதான்...

அப்பாவோடு ராமின் பரஸ்பர அறிமுகம்...

பேச்சுக்கள்...

அனுதாபங்கள்..

தொடர்பு நெருங்கிய போது ...அப்பா அதைக் கேட்டுவிட்டார் ஒருநாள்...

அனுவின் கண்களுக்குள் முரளி ஒரு நிமிஷம் வந்து போனான்...

முரளியை ஏமாற்றலாமா?

இது எப்படி ஏமாற்றலாகும்? கல்யாணம் செஞ்சுக்கிட்டாத்தான் ஒரு விதத்துல துரோகம்...

'உண்மையைச் சொன்னா முரளி தன்னை ஒதுக்க மாட்டார். அதேசமயம் கல்யாணம் செஞ்சுக்கிட்டு முரளியை எத்தனை நாள் பிரம்மச்சாரியா வச்சிருக்க முடியும்...?'

''அனுவைக் கல்யாணம் செஞ்சுக்கறியா ராம்? உடலுக்கு ஸ்நேகிதர்களாகவும், மனசுக்குத் தம்பதிகளாகவும் இருக்கலாமே.. பாதிக்கப்பட்ட ரெண்டு பேர் ஒண்ணு சேர்றதுதானே நியாயம்... என்ன ராம்?''

அவன் சம்மதிக்க...

முதலில்...

முரளியைத் தான் காதலித்த கதையை எழுத்து, எழுத்தாகச் சொல்லி முடித்தாள் அனு...

''**எ**ன்ன சொன்னீங்க ராம்? எனக்கு அனுவோட காதல் கதை ஆரம்பத்திலேயே

---

**மனைவியை மறுமணம் செய்த மந்திரி!**

திருப்பதியில் மொரிஷஸ் அமைச்சர் ஒருவர் தமது மனைவியையே இந்து முறைப்படி மறுமணம் செய்து கொண்டார்!

அமைச்சரின் பெயர் விஷ்ணு லட்சுமி நாராயணா. அவருக்கும் சீதா சரஸ்வதிக்கும் 10 ஆண்டுக்கு முன் பதிவுத் திருமணம் நடைபெற்றது. அப்பெண் பிரான்ஸ் நாட்டைச் சேர்ந்தவர்.

ஆனால் இந்து முறைப்படி திருமணம் செய்ய வேண்டும் என்ற ஆசை எழுந்தது. தங்களுடைய 9 வயது மகன், 7 வயது மகளுடன் வந்து ஏழுமலையான் ஸ்தலத்தில் ''மறுமணம்'' புரிந்து கொண்டனர்.

—ஆர். சச்சிதானந்தம்.



# பட்டுப் புடவை பரிசுத்திட்டம்

இந்தத் திட்டத்தில் ஆண் வாசகர்களும் தாராளமாகக் கலந்து கொள்ளலாம். பரிசு கிடைத்தால் தாயாருக்கோ சகோதரிக்கோ, மனைவிக்கோ அன்பளிப்பாகக் கொடுத்து மகிழலாம்.

## போட்டி 1. சமையலறைச் சிரிப்பு



● சமையலறை என்பது எப்போதும் வெந்து புழுங்குகிற இடம் மட்டுமல்ல. அங்கு குடும்பத் தலைவி பணியாற்றிக் கொண்டிருக்கும் போது கணவன், மாமியார், குழந்தை அல்லது வேலைக்காரி கூட வந்து ஏதாவது ஜோக் அடித்துச் சிரிக்க வைத்திருக்கலாம்.. இன்று நினைத்தாலும் சிரிப்புப் பொத்துக் கொண்டு வருகிற அந்தச் சந்தர்ப்பம், அப்போது கூறப்பட்ட ஜோக். இதனை ரத்தினச் சுருக்கமாகக் கீழே எழுதி, இந்த முக்கால் பக்கத்தைக் கத்தரித்து அனுப்புங்கள். உறையின் மேல் ''சமையலறைச் சிரிப்பு'' என்று எழுத வேண்டும். குலுக்கல் முறையில் பட்டுப் புடவை பரிசுக்கு ஒருவர் தேர்ந்தெடுக்கப் பட்ட பின் மிக ரசமான சிரிப்புக்கள் கல்கியில் பிரசுரமாகும். அவற்றுக்குத் தனியே வழக்கமான சன்மானம் உண்டு. முடிவு தேதி 21.5.84.

நினைவிருக்கட்டும் 52 பட்டுப் புடவைகளுள் ஒன்றை நீங்கள் பெற வாய்ப்புள்ளது. வாரம் தவறாமல் போட்டிகளில் பங்கு பெறுங்கள்.

என் பெயர் : ..............................

விலாசம் : ..............................

..............................

..............................

---

தெரியும்னு முரளிகிட்ட சொன்னீங்களா?''

''இல்லே அனு... அதிர்ச்சி வந்த மாதிரி நடிச்சேன்... உன்னைப் பழி வாங்கற எண்ணம் மனசில வந்த மாதிரி சவால் விட்டேன்...''

''எதுக்கு ராம்?''

''பாவம் அந்த அப்பாவிக் காதலன்... அவனோட ஆத்ம திருப்திக்குத்தான்.... நினைச்சது நடந்ததாச் சந்தோஷப்படட்டுமே ...? என்ன நஷ்டம் நமக்கு...?''

நிமிர்ந்து பார்க்க முடியாத உயரத்துக்கு ராம் போய் விட்டதை அனு உணரும் போது...

முரளி சந்தோஷமாக பாதாம் அல்வா சாப்பிட்டுக் கொண்டிருக்கிறான்.

# என்பீல்ட்

# மண்ணெண்ணை

## பம்பு செட்டுகள்

- உறுதியானவை. நம்பிக்கையானவை. நெடுநாள் உழைப்பவை.
- சிறு விவசாயிகளுக்கு மிக ஏற்றவை: 3 ஏக்கர் வரை-2 ஹார்ஸ் பவர் பம்பு செட்டு 5 ஏக்கர் வரை-3.4 ஹார்ஸ் பவர் பம்பு செட்டு
- மிக இலேசானவை—நிலம் விட்டு நிலம் எடுத்துச்செல்ல எளிதானவை
- அரசுக் கடன்களுக்கும் மானியங்களுக்கும் அங்கீகாரம் பெற்றவை.

4 லட்சம் விவசாயிகளுக்கு மேல் பயன் படுத்துகிறார்கள்



IS:7347



Villiers

# என்பீல்ட்

புல்லெட் மோட்டார் சைக்கிள் அளிப்பவர்கள்

ADWAVE EIA 2404




# ப்ராஸ்தோ ஆர்தோ படிப்பு

● இரண்டு வாரங்களாய் மகளிர்க்கான பாலிடெக்னிக் படிப்புகள் பற்றிப் பார்த்தோமல்லவா? இந்த வாரம் மாணவர்களுக்கான பாலிடெக்னிக் படிப்புக்களைப் பற்றி அறிந்து கொள்ளலாமே!

ஆண்களுக்கு, சிவில் இஞ்சினீரிங், எலக்டிரிகல் இஞ்சினீரிங், எலக்டிரானிக்ஸ் இஞ்சினீரிங், மெகானிகல் இஞ்சினீரிங், இவை தவிர, மீன் வள இயல், மற்றும் செயற்கை உறுப்புகள் தயாரிப்பு (Prosthotics and Orthotics) இவற்றில் டிப்ளமாவுக்கான படிப்புகள் உள்ளன. இவை எல்லாமே மூன்று வருடப் படிப்புக்கள்.

இவை எல்லாவற்றுக்குமே அடிப்படைக் கல்வித் தகுதி பத்தாம் வகுப்பு. முதல் நான்கிற்கும் முதல் வருடப் படிப்பு பொது. இரண்டாவது வருடத்தில் தான் விரும்பிய பிரிவைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

மீன்வள இயல் டிப்ளமாவைப் பொறுத்த வரை இந்த படிப்பில் சேர விரும்புபவர்கள் பத்தாம் வகுப்பில் உயிரியல் படித்திருக்கவேண்டும். இன்று பல கால் முடமானவர்கள் நாட்டில் இருக்கிறார்கள். இவர்களுக்குத் தேவையான செயற்கை உறுப்புகளைத் தயாரிப்பது பற்றிச் சொல்லித் தருவது தான் டிப்ளமா இன் ப்ராஸ்தோடிக்ஸ் அண்ட் ஆர்தோடிக்ஸ் படிப்பு. இதில் சேர பத்தாம் வகுப்பு பாஸ் போதும்.

முதல் நான்கு படிப்புகளுக்குரிய வேலை வாய்ப்புகள் பற்றி முன் இதழ்களில் சொல்லப்பட்டுவிட்டது. அடுத்த இரண்டுக்கும் இன்று தேவை பெருகுவதால், வேலை வாய்ப்பு அதிகரித்து வருகிறது என்பது உண்மை.

தவிர, 'மெகானிகல் இஞ்ஜினீயரிங், மீன் வள இயல் இரண்டிற்கும், சாதாரண மூன்று வருட டிப்ளமா படிப்பு தவிர, 'சாண்ட்விச் (Sandwich) படிப்பும் உள்ளது. இது மூன்றரை வருடம். சாண்ட்விட்சின் ஸ்பெஷாலிட்டி என்ன? வழக்கமான மூன்று வருடப் படிப்புக்குப் பிறகு, ஒரு செமஸ்டர் காலத்துக்கு (ஆறு மாதம்) சம்பந்தப்பட்ட தொழில் நிறுவனங்களில் இந்த மாணவர்கள் பயிற்சி பெறுவார்கள். இந்த [illegible]வற்றுக்குமே—மூன்று, அல்லது மூன்றரை வருடங்களுக்கு — சுமாராக ஆயிரம் முதல் ஆயிரத்து முந்நூறு வரை கல்லூரிக்குக் கட்டணம் ஆகலாம்.

✕ செயற்கை கால்




அது சரி! ஆண்களுக்கான பாலிடெக்னிக்குகள் எங்கெங்கே உள்ளன?

சென்னை, மதுரை, திருச்சி, கோவை, சேலம், வேலூர், சிவகாசி, பழனி, பொள்ளாச்சி, காஞ்சிபுரம், விருதுநகர், நாகர்கோவில், மாயவரம்... ஸாரி மயிலாடுதுறை, நாகப்பட்டினம், பாண்டிச்சேரி... என்று பெரிய லிஸ்ட் இருக்கிறது.

(இங்கே ஒரு இடைச்செருகல். பெண்களுக்கான பாலிடெக்னிக்குகள் சென்னை, மதுரை திருச்சி, தஞ்சை, சிவகாசி, எட்டயபுரம், நாகர்கோவில், இங்கெல்லாமுள்ளன)

பத்தாம் வகுப்பு தேர்வு முடிவுகள் வெளியானதும், மாணவர்கள், தம் இடத்துக்கு அருகிலுள்ள பாலிடெக்னிக்குகளுக்கு எழுதி விண்ணப்பம் வரவழைத்துச் சேர வேண்டும். மறுபடியும் நினைவூட்டுகிறேன். பாலிடெக்னிக்குகளுக்கு இப்போது கிராக்கி அதிகம். எனவே நல்ல மார்க் வாங்க வேண்டியது ரொம்பவும் அவசியம்.

இந்த வாரம், இப்பகுதியை முடிக்கும் முன்பு ஒரு சின்ன வேண்டுகோள்: மாணவர்களே! பெற்றோர்களே! உங்களுக்கு மேல் படிப்பு பற்றி ஏதாவது சந்தேகங்கள் இருந்தால், அவற்றை விவரமாக எழுதி அனுப்புங்கள். சம்பந்தப்பட்டவர்களைச் சந்தித்து, விளக்கம் வாங்கி, வெளியிடலாம். இது உங்களுக்கு மட்டுமின்றி உங்களைப் போலவே சந்தேகம் கொண்ட பிறருக்கும் உதவக் கூடுமல்லவா?

—எஸ். சந்திரமௌலி

# வேங்கைச் வசம்

## கோவி. மணிசேகரன்

**சென்ற இதழில்...**

காணப்பேரெயில் என்ற வலிமைமிகு கோட்டையுடன் வாழும் சிற்றரசன் வேங்கைமார்பன். அவன், பாண்டியப் பேரரசின் இளவரசியான திருமேனி என்பவளைச் செவி வழியாகக் காதலிக்கிறான். அதே கோட்டையுள் வாழும் முறைப்பெண் தியாகவல்லி, அவனைக் கண் வழியே காதலிக்கிறாள்.

வேங்கைமார்பன், திருமேனியைப் பாராமலேயே காதலிக்கும் நிலை கண்டு நெஞ்சங்கள் திருப்பம் காண்கிறாள்; நினைவில் தியாகம் செய்யவும் தீர்மானிக்கிறாள், தியாகவல்லி. அப்போது கோட்டைக்குள் பெருத்த களேபரம் நடக்கிறது.

அவன் அன்புடன் வளர்த்த இரு வேங்கைகளை—அதுவரை அவனுடன் விளையாடிய வேங்கைகளைக் கூட்டில் அடைத்துச் சென்று கவனிக்க....

வேங்கை மார்பன் அழகைக் கண்டு வருமாறு திருமேனி அனுப்பிய ஒற்றன் பிடிபடுகிறான். 'அவளென்ன அழகை அறியத் தூது அனுப்புவது? இதோ நானே நேரில் செல்கிறேன்' என்று புறப்படுகிறான் வேங்கைமார்பன்.

அவனது புறப்பாட்டைக் கண்ட தியாகவல்லியின் அண்ணன் – சேனாபதி காளிங்கன் கறுவிக் கொள்கிறான்.

### அத்தியாயம் 2

### வைகைத் திருவிழா

இளவேனில் காலத்து வசந்த ருதுவின் காலைப்போது, மதுரை மாநகரை மங்கலமாக விழிக்கச் செய்கிறது.

மதுரைக்குத் தெற்கெல்லையில் இருந்த ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் காலத்தில் கட்டப் பெற்ற மண்டபத்தில் இந்து நாழிகைப் போது ஓய்வு கொண்டான் வேங்கைமார்பன்.

அருகிலிருந்த பூதபாண்டியன் பேரேரியில் காலைக் கடன்களை முடித்துக்கொண்டு, மிகவும் எளிமையான அலங்காரத்துடன் புறப்பட்டான்.

அப்போது மதுரையில் வைகையாற்று வெள்ளத் திருவிழா நடந்து கொண்டிருந்த நேரம்...

வைகையில் நிறைபாரமாக நீர் கரை புரண்டு ஓடிக் கொண்டிருந்தது. அவ்வாறு வெள்ளம் கட்டுக்கடங்காது வழிந்தோடுகிற போது, விழா நடத்தி வழிபடுகிற வழக்கம் சங்க காலத்திலிருந்தது.

காவியங்களில் கண்விழித்து ஜீவியங்களில் நெல் கொழிக்கும் வையையெனும் பொய்யா குலக்கொடியைப் பார்வையிட வேண்டும் போலத் தோன்றியது வேங்கைமார்பனுக்கு.

அரண்மனையில் புகுந்து விட்டால், அமர்க்களம், குதூகலத்தில் கொண்டாட்டம் நடத்த ஆரம்பிக்கும். அதன் பிறகு, உபசாரங்கள், பிரிவு உபசாரங்கள்தாம்! மதுரையின் சாரமிக்க அழகினைப் பார்க்க முடியுமா?

பார்க்க முடியும்; அரச பரிவாரங்களுடன் பார்வையிடுவது பெருமையாக இருக்கலாம்; ஆனால் மக்களோடு மக்களாய் இணைந்து, தனித்துப் பார்வையிடுகிற அருமை வருமா?

வைகைக் கரையை அடைந்து கவனிக்கிறான் வேங்கை மார்பன்.

ஆற்றின் நடுவே இட்டுத் திட்டாக மணற்குன்றுகள். அவற்றில் மயக்கும் பூம்பொழில்கள், மரங்கள் சூழ்ந்த சோலைகள். கோங்கு மரங்களிலிருந்து உதிர்ந்த மலர்கள் நீரில் மாலையிட்டு மிதந்து செல்கின்றன. நீர்த்துறைகளையடுத்தாற்போல வசிக்கும் பழங்காலப் பாணகுடிமக்கள்.

பெருந்தனக்காரர்கள், அந்தப் புரண்டோடும் வெள்ளத்தை அனுபவிக்க, சிங்கமுக முகப்புக் கலையும் யானைமுக முகப்புக் கலையும் கொண்ட படகுகளில் ஏறி, வைகையை வாழ்த்தி, வாழ்த்தி அனுபவித்து ரசிக்கிறார்கள்;

கரையோரமாக நடந்து செல்கிறான் வேங்கைமார்பன். என்னே இனிதான காட்சி!



வெகு தொலைவில் உடன் வந்த வீரர்கள், ஒரு கண்ணைத் தங்கள் அரசன் பாலும், மறுகண்ணை விழாவின் பாலும் செலுத்தி நடமாடுகிறார்கள்.

வழியே சென்ற ஒருவனை அழைத்து, இவ்விழாவின் நோக்கமென்னவென்று விசாரிக்கிறான் வேங்கைமார்பன்.

அவன், பளிச்சென்று மறுமொழி பகராது "நீங்கள் அயல்தேசமா?" என்றான்.

வேங்கைமார்பனும் தலையசைவின் மூலம் விடை பகர்ந்தான்.

வழியே சென்றவன் சொன்னான்:

"இந்தத் திருவிழா கார்த்திகை மார்கழியில் நடக்க வேண்டியது. இல்லை, பங்குனியில் நடந்தே தீரும். பருவ மழை தவறியதால் சித்திரையில் நடக்கிறது. காவேரியில் வெள்ளம் வருவது அதிசயமாகாது. வைகை வெள்ளம் அதிசயமானது. அதனால் தான் படகுவிடு விழா நடக்கிறது!"

அவன் நடையைக் கட்டினான்.

வெகு தூரம் நடந்து வந்த வேங்கை மார்பன் திரும்பிப் பார்க்கிறான். அப்படியொன்றும் வெகு தூரமல்ல; கண்ணுக்கெட்டிய தூரம்தான்.

அங்கே அடுக்கடுக்காகப் பாறைகள் வரிசை கட்டிக் காணப்பட்டன. ஒரு செங்குத்தான பாறைக்கருகிலிருந்த சமனமான பாறையில் தனிமை நாடி அமர்ந்து கொண்டான். அவனது நெஞ்சில் திருமேனி திருநடம் புரியத் தொடங்கி விட்டாள். விழாவைக் கண்டுவிட்டு அந்த வேல்விழியாளைத் தரிசிக்கத்தானே போகிறோம்?

தொலைவில் இரு பெண்மணிகள், மகிழ்ச்சி வெள்ளம் கரைபுரளப் பேசிக்கொண்டு வந்தார்கள். அவர்களும் தனிமை நாடி வருகிறவர்கள் போலும் என்றெண்ணிக் கொண்டான் வேங்கைமார்பன். ஆயினும் அவர்களுள் ஒருத்தி அழகுக் காவியமாக



வும் இன்னெருத்தி அதன் பாயிரமாகவும் இருந்தாள்.

வந்தவர்கள், முன்னே ஓர் இருபதடித் தொலைவிலிருந்த பாறையில் அமர்ந்து கொண்டனர். பார்க்கப் பெருந்தனக்காரர் வீட்டுப் பெண்களைப் போலத் தோற்றம் தந்தனர். அவர்கள் இந்த உலகை மறந்து, ஏதேதோ பேசிக் கொண்டிருந்தார்கள்.

என்ன அது?

தொலைவில் கரையோரமாக ஓங்கிவளர்ந்திருந்த கோங்கு மரத்தடியைக் கவனிக்கிறான்.

அங்கிருந்து நெளிந்து வருவதென்ன?

ஆ! முதலை... எவ்வளவுக்கு நீண்ட முதலை!

பாறையில் அமர்ந்து தம்மை மறந்து பேசிக் கொண்டிருந்த இரு பெண்களில் ஒருத்தி — அழகுக் காவியம், நீரில் தனது கால்களை உதப்பி உதப்பி அலசிக் கொண்டிருக்கிறாள். அவளது காலைப் பதம் பார்க்க நெளிந்து வருகிறது அந்த முதலை.

அதோ எட்டிவிட்டது.

தன்னை மறந்த துள்ளலுடன் சரேலென்று பாய்ந்த வேங்கைமார்பன், நீரில் கால்களை உதப்பிக் கொண்டிருந்த அழகுக் காவியமனைய அந்தப் பெண்ணை அணைத்து, விசுக்கென்று நீருக்கு மேலே தூக்கி, திறந்திக் கரைக்குச் சற்றுத் தூரம் கொண்டு வந்து நிற்க வைத்தான். அடுத்தவள் கூச்சலிட்டு எழுந்தோடி வந்தாள்.

பளீர்...

கன்னத்தில் விழுந்த அறை கைம்மாறு சொன்னது.

கன்னத்தைத் தடவிப் புன்முறுவல்பூத்த வேங்கைமார்பன், கையை நீட்டிக் காட்ட...

அங்கே...

நெளிந்து ஏமாந்து திரும்பிக் கொண்டிருந்த நீண்ட முதலையைக் கண்டு பிரமித்துப் போனாள், உதவியதற்குக் கைம்மாறு அளித்த அழகுக்காவிய நல்லாள்.

கன்னத்தைத் தடவிக் கொண்டிருந்த வேங்கைமார்பனை நோக்கி, நன்றிக்கு நடனங்களை ஆயத்தமாக்கிக் கொண்ட அந்த அழகுக் காவியம், 'என்னைப் பொறுத்தருளுங்கள்!'' என்றது.

சித்தன் சிருஷ்டித்த சித்திரமோ? அல்லது சிங்காரப் பொன்னுலகின் தேவதையோ?

வேங்கைமார்பன் இதழ்களில் வேங்கை மரத்துப் பொன்னிறப் பூக்கள் மின்னுகின்றன.

''நீங்கள் யார்?''

—விசாரித்தது அழகுக் காவியம்.

''நிச்சயமாக உங்கள் தோற்றத்தைப் பார்க்கிற போது ராஜ பரம்பரையாகத்தானிருக்க முடியும்! ராஜகுமாரனா?''

வேங்கையின் மௌனம் வேடிக்கை பார்க்கிறது..

''நான் பாண்டிய நாட்டின் பேரமைச்சரின் மகள். தயவு செய்து பேசுங்கள்!''

''அதற்காக என்னை என்ன செய்யச் சொல்லுகிறீர்கள் மந்திரி குமாரி?''

அவள் அவன் மீது மயக்கமுற்றாள். எண்ணியவாறு, எதிர்பார்த்தவாறு எட்டிப் பிடிக்கிற தூரத்தில் கிடைத்து விட்ட எழில்மாறன் — மாறன்!

''நீங்கள் யார்?''

உண்மையைச் சொல்லலாமா?

வேண்டாம்; மந்திரிகுமாரி என்கிறாள்: வினையாக முடியும் சிந்தித்து மறுமொழி சொன்னான்: ''நான் தகடூர் வேந்தன் பொருட்டெழினியின் நண்பன்; அரசாங்க சேனாபதி. வைகைத் திருவிழாவைப் பார்க்க வந்தேன்.''

சில கணங்கள் கண்கள் பேசின.

வேங்கைமார்பனே நாவசைத்தான்.

''மந்திரிகுமாரி! உங்கள் மனநிலைஎனக்குப் புரிகிறது நான் வைகை விழாவைப்பார்க்க வந்தவன்; வாழ்க்கை விழாவுக்கு அழைக்க வேண்டாம்!''

அவள் துணிவாகக் கண்களை ஒருகணம் மூடிப் பின்னர் திறந்து அர்த்தமுடன் சிரிக்கிறாள்.

''வீரப்பெருமகனே! நான் எந்த விதத்தில் தாழ்ந்திருக்கிறேன் என்பதை எடுத்துச் சொல்லுங்கள்; போய் விடுகிறேன். ஆனாலும் பெண் பாவத்தை உங்கள் மடியில் கட்டி விட்டுத்தான் செல்வேன். என்னை நீங்கள் அணைத்துத் தூக்கிய பிறகு நான் இன்னொருவனை அணைப்பதாவது?

''நீங்கள் என்னிலும் எல்லா வகையிலும் உயர்ந்தவர்கள். இல்லையென்று நான் மறுக்கவில்லை.''

''அது சரி; நான் கேட்ட கருமதியாயங்களுக்கு மறுமொழியைக் காணுமே?''

''.....''

''நானே வெட்கத்தை விட்டுக் கேட்கிறேனே என்று எண்ண வேண்டாம். நான் உங்களைப் பரிபூரணமாக நேசிக்கிறேன். உங்கள் தோள்களால் ஏற்பட்ட தாக்கம் என்னை உங்களிடம் ஒப்படைத்து விட்டது. நான் இப்போது உங்களிடம் காதலை யாசிக்கிறேன். வாருங்கள் எங்கள் மாளிகைக்குப் போவோம். எனது தந்தையாரை அறிமுகம் செய்கிறேன்.''

என்ன மறுமொழி கூறுவதென்று புரியாது பொறிகலங்கிப் போனான் வேங்கை மார்பன். இது என்ன அறத்துன்பம்....

சற்றே நிமிர்ந்து பெருமூச்சு விட்டு, ''மந்திரிகுமாரி! என்னைப் பொறுத்தருள வேண்டுகிறேன். ஆபத்துக்குத் துணைபுரிவது எந்த விதத்திலும் தவறாகாது.''

''நான் இப்போது அதற்கும் மீறியநிலையில் இருக்கிறேன். நீங்கள் ஆபத்துக்கு வந்து உதவாமல், வெறுமனே அறிமுகமாகியிருந்தாலும் உங்களை நான் நேசித்து இருப்பேன்; காதலை யாசித்து இருப்பேன். மந்திரி குமாரியைச் சேனாதிபதி மணக்கக் கூடாதா?''

சிறிது நேர மௌனத்துக்குப் பிறகு...

வேங்கைமார்பன் நாவாடினான்:

''நீங்கள் எனது நிலையை அறிய மாட்டீர்கள். நான் ஏற்கெனவே எனது நெஞ்சை இன்னொருத்திக்குக் கொடுத்துவிட்டவன். அவளுக்கு நான் இந்தப் பிறவியில் துரோகம் நினைக்க மாட்டேன். நான் அவளை நேசிப்பது இந்த மதுரைவாழ்

# அவர்கள்



ஆடம்பரச்சி இல்லாதவர்களாகவும், உண்மையான நட்பிற்கு அருகதையற்றவர்களாகவும் அதிகாரத்தில் இருப்பவர்கள் மாறி விடக் கூடாது. ஏனெனில் முற்றுகவே அவர்கள் குணமுரண்பாடுகளால் வார்க்கப் பட்டவர்கள். இளம் நாட்களில் அவர்களுக்குக் கல்வி மறுக்கப்படலாம். குழந்தைப் பருவம் தொட்டே அவர்கள் முகஸ்துதியால் சின்னபின்னப்படுத்தப்படுகிறார்கள். எதிலும் வரம்புகளுக்கு வெளியே வளர்கிறார்கள்.

மக்களில் ஒருவருடைய உதவி மற்றொருவருக்குத் தேவை என்பதையும், போராடும் நிமிஷங்களில் தனிமைப்படுத்தப்படுவதே ஒரு தோல்வி என்பதையும் அவர்கள் கடைசிக் காலத்தில் – தங்கள் அஸ்தமன வேளையில் தான் உணர்கிறார்கள்.

அவர்கள் விமர்சனங்களின் சுயதரிசனம் காணும் வேளைகளைத் தவிர்ப்பதால் நண்பர்கள் கூட – அவர்களுக்கு அந்நியமாகிறார்கள்.

சுயமோகம் சுயவிமரிசனத்திற்குத் தடைக் கல்லாக மாறுகிறது. கருத்த முகத்திரைகளும், இருள் வழிகளும் கோட்டை கட்டுகின்றன. அவர்களைப் பற்றிய வெளியுலக விளம்பரங்கள் சாத்தானை தேவனுக்கிய கதைபோ. ஆட்சி பீடமேறிய ஒவ்வொரு தலைவனின் வரலாற்றை எழுத ஆதாரங்களைச் சேகரிக்கும் போதும் – ஒரு படைப்பாளி மகாபீட்டரின் வரலாற்றை எழுதப் போன டால்ஸ்டாயின் அனுபவத்தையே பெறுகிறான். காளிதாசன் பாடியதைப்போல் நிலவின் களங்கம் அதனுடைய அழகை மறைப்பதில்லை. அதைப் போல அவர்களது பலவீனங்கள் வெற்றிகளை வழிமறிப்பதில்லை.

பதவிக்குப் போகிறவர்கள் முள் கிரீடம் சுமப்பதாக யார் சொன்னது? அவர்கள் நமக்கு முள் கிரீடம் சூட்டி விட்டு (எல்லோரும் இந்நாட்டு மன்னர்:) ரோஜாப் படுக்கையில் உறங்கப் போய்விடுகிறார்கள்.

## நா.காமராசன்

---

மீனுட்டிடம்மையில் பக்திக்கும் மேம்பட்டதாகும்...''

''யார் அந்தப் பாக்கியசாலி? நானறியலாமா?'' – இவ்வாறு கூறுகிறபோது அந்த அழகுக் காவியத்தின் குரல் தழுதழுத்தது. கண்களில் நீர் முத்துக்கள் அரும்பி விட்டன.

ஒருகணம் தயங்குகிறான் வேங்கை மார்பன்.

கேட்பவள் பாண்டிய நாட்டுப் பேரமைச்சரின் புதல்வி: நாம் சொல்லப் போவதோ மாமன்னர் புதல்வி. பொறுமையின் எதிரொலியால் நிகழ்ச்சித் திருப்பம் ஏதேனும் நேர்ந்து விடுமானுல்? எதற்காக இங்கே இருமேனியின் பெயரை இழுக்க வேண்டும்?

அவன் சொன்னான்: ''எனது அரண்மனையில் என் பக்கத்திலேயே இருக்கிறாள். அவள் ஒரு காவியத் தலைவி; ஓவியப்பாவை; எனது ஜீவியச் செல்வி!''

நங்கை நல்லாளின் நயனங்கள் நனைகின்றன.

வேங்கைமார்பன், அமைதியாகவும் சமாதானமாகவும் சொன்னான்: ''தயவுசெய்து வேண்டிக் கொள்கிறேன். நடந்த நிகழ்ச்சியை மறந்து விடுங்கள்; நான் ஒருவேளை உங்கள் அரண்மனைக்கே வந்தாலும் இது குறித்து நீங்கள் யாருக்கும் நினைவுபடுத்துவதால் பாதிக்கப்படுபவர் நீங்களாகத்தானிருக்க முடியும். என்னை உங்கள் சகோதரனுக எண்ணிப் பாருங்கள். உங்கள் சகோதரன் தொடுகிற போது ஏற்படுகிற கௌரவமான மெய்ப்பாடுகளே நான் தொட்டதிலும் ஏற்பட்டதாக எண்ணிக் கொள்ளுங்கள். நேரமாகிறது. நான் விடைபெற வேண்டும்!''

''கண்களைத் துடைத்துக் கொண்டு சோகமான பெருமூச்சுடன் ஒரு முடிவுக்கு வந்துவிட்ட அந்த நங்கை நல்லாள், ''விடைபெறலாம் வீரகுமாரரே! கானப்பேரெயில் வேங்கைமார்பரைப் புரிந்து கொண்டதில் நன்றி...'' என்றாள்.

அடுத்தகணம்...

அதிர்ச்சியின் பிடியில் அகப்பட்டு விழித்தான் வேங்கை மார்பன்.

''அதிர்ச்சி கொள்ள வேண்டாம்! எனக்கு எப்படித் தெரியும் என்று நினைக்கிறீர்களா? உங்கள் விரலில் இருக்கும் இலச்சினை மோதிரம். சோழர்களுக்குப் புலிச்சின்னமே யானாலும் அது பாய்வது போன்றிருக்கும். நீங்களணிந்திருப்பது நீண்ட வேங்கை படுத்திருப்பது போன்றது. நீங்கள் பாண்டிய மரபேயானாலும் கொடியில் மட்டும் மீன்சின்னத்தை வைத்துவிட்டு, இலச்சினைகளில் உங்கள் பெயருக்கேற்ப, வளர்த்து வரும் வேங்கைகளுக்கேற்ப அண்மைக் காலமாக வேங்கைச் சின்னத்தை அறிமுகம் செய்ததை நானறிவேன். தகடூர் அதியமான் ராஜ சின்னம் வேங்கையல்லவே? விடை பெறுகிறேன், சகோதரரே!''

அவள் வேகமும் கோபமுமாக விறுவிறுவென்று நடக்க, அதுவரை ஒரு மரத்தடிவேரில் அமர்ந்திருந்த அரண்மனைச் சேடியொருத்தி பின் தொடர்ந்து ஓட, தன்னை இனங்கண்டு கொண்டார்களே என்ற தவிப்புடன் வேங்கை மார்பன் கவனிக்க... (தொடரும்)



# கேட்பாரற்ற கார்ப்பரேஷன்

சென்னை கார்ப்பரேஷனில் பில்களைப் பாஸ் செய்து ஒப்பந்தக்காரர்களுக்குப் பணம் வழங்கும் பிரிவில் ஒரு பெண்மணி இருந்தார். ஒருநாள், சாலை ஒன்று போடப்பட்டதற்கான பில் ஒன்று அவரிடம் வந்தது. அதை எடுத்துக் கொண்டு தனது மேலதிகாரியிடம் ஓடினார். 'என்ன ஸார், இந்தவேலை நடந்திருக்கவே முடியாது.' என்றார். அவரிடம் மேலதிகாரி சொன்னார். ''நம் வேலை பில்களைப் பாஸ் செய்து அனுப்புவது. இதிலெல்லாம் நாம் தலையிட வேண்டாம். கீழிருந்து மேல்வரை இதில் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள். கண்டு கொண்டால் நமக்குத் தான் ஆபத்து'. அந்தப் பெண்மணி வேறு வழியின்றி அந்த பில்லையும் பாஸ் செய்து அனுப்பி விட்டார். அந்த பில் அந்தப் பெண்மணி வசித்து வரும் சாலைக்குக் கற்களைப் பரப்பி தார் போடப்பட்டதாகச் சொல்லும் பில். உண்மை என்னவென்றால் எட்டு வருடங்களாக அந்தத் தெரு அப்படியே தான் இருக்கிறதாம். இது தான் சென்னை கார்ப்பரேஷனின் இன்றைய நிலை.

1981–82–ல் மட்டும் 1505 கி. மீ. சாலைகள் போடப்பட்டனவாம். செலவழிக்கப்பட்டதாகச் சொல்லும் தொகை ஒரு கோடி ரூபாய். மார்ச் மாத இறுதியில் நீங்கள் கார்ப்பரேஷன் கட்டிடத்தில் நுழைந்தீர்களென்றால் உன்னைகாண்டிராக்டர்களின் கூட்டம் மொய்த்துக் கொண்டிருக்கும். அந்த நிதியாண்டுக்காக ஒதுக்கப்பட்ட தொகையை எப்படியாவது செலவுக் கணக்கில் காட்ட வேண்டுமென்று அதிகாரிகள் போடாத ரோடுகளுக்குப் பணம் வழங்க ஏற்பாடுகள் செய்து கொண்டிருப்பதைப் பார்க்கலாம்.

மாநகராட்சிக்கு. அண்ணா சாலை, பூந்தமல்லி சாலை, கடற்கரை சாலை, ஆகிய சாலைகளைத் தவிர மற்ற சாலைகளைப் பற்றி அக்கறை கிடையாது (மேற்சொன்ன சாலைகள் அடிக்கடி மந்திரிகள் போகும் சாலைகளாயிற்றே) உதாரணமாக வால்டாக்ஸ் சாலையைச் சொல்லலாம். ''நிறைய போக்குவரத்து கொண்ட இந்தச் சாலை குண்டும் குழியுமாக இருக்கிறது. எப்போதுதான் புதிதாகப் போடப் போகிறார்களோ?'' என்கிறார் இத்தொகுதி எம்.எல்.ஏ. சோமு.

### கேஸ் போடலாமே!

சாலைகள் குண்டும் குழியுமாக இருப்பதால் பல்வேறு விபத்துக்கள் ஏற்படுகின்றன. விபத்துக்களில் பாதிக்கப்பட்டவர்கள் கார்ப்பரேஷனின் மீது கேஸ் போடலாமே? யாராவது செய்தால் கார்ப்பரேஷனின் கவனம் சாலைகளின் மீது கொஞ்சமாவது திரும்பும்.

### குப்பையோ குப்பை

நகரில் குப்பைகளை அப்புறப்படுத்த 170 லாரிகள் இருப்பதாக மாநகராட்சி சொல்கிறது. இதுதவிர ஏராளமான மாட்டு வண்டிகள் உள்ளன.



# அலசல்

கொஞ்ச நாட்களுக்கு முன் நகரில் 1500 டன் குப்பைகளை மாநகராட்சி தினமும் எடுக்கிறது என்று கணக்குக் கூறிவிட்டார் அமைச்சர். கணக்கு சரியோ, தப்போ தெருக்களில் குப்பை குறைவதில்லை.

குப்பைகளை அள்ளும் வாரிகளைக்கவனிக்கஏழெட்டு ஒர்க்ஷாப்கள் வேறு இருக்கின்றன. இங்கு என்ன நடக்கிறது? நிறைய சாமான்கள் திருட்டுப் போகின்றன. உதிரி பாகங்கள் வாங்கப்படுகின்றன. எதற்கு? அதிகாரிகளின் கார்களுக்குப் போடத்தான்! சில சமயங்களில் வாகனங்கள் பயன்படுத்தப்படாமலேயே விலைக்குப் போடப்படுவதுண்டாம். பல சந்தர்ப்பங்களில் கார்ப்பரேஷன் வாரிகள் பிரைவேட் டிரிப்புகளுக்கும் போவதுண்டு.



என். வி. என். சோமு

## கொசுக்களைப் பற்றிக் கொஞ்சம்!

கார்ப்பரேஷன் தயவில் நடக்கும் இன்னொரு மாபெரும் நிகழ்ச்சி கொசு உற்பத்தி. மாநகராட்சி பட்ஜெட் சிலகோடிகளை இதற்கு ஒதுக்கிக் கொண்டுதான் இருக்கிறது. மாநகராட்சி கடைநிலை ஊழியர்கள் மாதக்கடைசியில் ஏதோ பம்பு சகிதம் வந்து வாசனை திரவத்தைத் தெளித்துவிட்டு அரையோ, ஒன்றோ வாங்கிச் செல்வார்கள். பாவம், இவர்களை விடுங்கள்; ஏழைச் சிப்பந்திகள். பெரிய அளவில் என்ன நடக்கிறது?

இந்த மருந்துகளுக்கு ஒப்பந்தம் கோருவதில் ஊழல். ஆர்டர் செய்யப்பட்டுள்ள அளவுக்கு மருந்துகள் சப்ளை செய்யப்படுவதில்லை. பணம் ஏராளமாகக்கைமாறுகிறது. யார் கேட்பது?

கொசுவை ஒழிப்பதற்கென்று புகையைக் கக்கும் ஒரு இயந்திரத்தை மாநகராட்சி வாங்கியிருக்கிறது. ஆனால் அந்த இயந்திரம் பாதிநாள் ஷெட்டிலேயே தூங்கிக் கொண்டிருக்கிறது.

## ஹெல்தா: 'வெல்த்தா'?

சென்னையில் 70 இடங்களில் கார்ப்பரேஷன் டிஸ்பென்ஸரி என்று போர்டு போடப்பட்டிருக்கிறது. இப்போதெல்லாம் பெரும்பாலான மக்கள் கார்ப்பரேஷன் ஆஸ்பத்திரிக்கே செல்லுவதில்லை. காரணம், நோய் அதிகரித்து விடுமோ என்று பயம் தான். ரிப்பன் பில்டிங் கணக்கில் பார்த்தால், டிஸ்பென்ஸரிக்கு மிகவும் விலை உயர்ந்த மாத்திரைகள் வழங்கப்பட்டதாக (வாங்கப்பட்டதாக) கணக்கில் இருக்கும். டிஸ்பென்ஸரிக்குச்சென்றால், பத்து பைசா மாத்திரைகளையும், பத்து வித கலர் மிக்ஸர்களை மட்டுமே காணலாம்.

இந்த டிஸ்பென்ஸரியைப் பற்றிப் பேசும் போது ஊழியர் ஒருவர் சொன்னார். ''ஊசி போடுவது எப்படி என்று பெரும்பாலான டாக்டர்களுக்கு மறந்து போயிருக்கும். காரணம், மருந்து இருந்தால் தானே ஊசி போடுவதற்கு!''

மாநகராட்சிக் கட்டிடத்தில் ஊழியர்களுக்கு என்று ஒரு ஆஸ்பத்திரி இருக்கிறது. ஆனால், ஊழியர்கள் மட்டுமல்ல; ஊழியர்களுக்குத் தெரிந்தவர்கள் எல்லோரும் அங்கு செல்கிறார்கள். கவனிக்க வேண்டியவர்களைக் கவனித்தால் நல்ல மருந்துகள் கிடைக்குமாம்.

கார்ப்பரேஷனின் பல்வேறு பிரசவ ஆஸ்பத்திரிகளில், ஆயாக்களை (Mid-wife) அழைத்து வர ரிக்ஷாக்கள் உண்டு. ஆனால் இவற்றை ஓட்டுவதற்கு ஆட்கள் கிடையாது.

விலை உயர்ந்த மருந்துகள் கார்ப்பரேஷனில் வாங்கப்படுகிறதா? இந்தக் கேள்வியை ஊழியர் ஒருவரிடம் கேட்டோம். ''மாரடைப்பு போன்ற சமயங்களில் கொடுக்கும் விலையுயர்ந்த மாத்திரைகள் மருத்துவ சாதனங்களுக்குக் கூட ஆர்டர்கள் கொடுக்கப்படுகின்றன. ஆனால் உண்மையில் அவை வருவதில்லை. சப்ளை செய்தமாதிரி கணக்கில் காட்டப்படுகிறது. அவ்வளவுதான். ஹெல்த் டிபார்ட்மெண்ட், அதிகாரிகளுக்கு வெல்த் இலாகா சார்'' என்றார்.

## விதவையாக நிற்கும் விளக்குக் கம்பங்கள்

சென்னை நகரம் முழுவதும் 45000 விளக்குக்

நகரத் தந்தைகள் கூடும் சபை தூசி படிந்து துணி போர்த்தப்பட்டு அம்போ என்று இருக்கும் காட்சி.



கம்பங்கள் இருப்பதாகக் கார்ப்பரேஷன் கூறுகிறது. இதற்கான பல்புகள் டெண்டர்கள் மூலமாக வாங்கப்படுகிறது. (இதற்கு மேல் எதுவும் சொல்ல வேண்டாமே!) ஒரு அதிகாரி 18.4.84 அன்று நிலவரப்படி நகரில் எரியாத விளக்குகளின் எண்ணிக்கை 7621 என்றார். நமக்கொரு சந்தேகம். அவர் சொன்னது எரியும் விளக்குகளின் எண்ணிக்கையோ என்று!

நுங்கம்பாக்கம் ராமா நாயக்கர் தெருவில் உள்ள நண்பர் ஒருவர் சொல்கிறார். "என் வீட்டின் எதிரிலுள்ள டியூப் விளக்கு எரியவில்லை என்று நெடு நாட்களாகப்புகார் சொல்லி வந்தேன். கடைசியில் வந்து லைட் போட்டு விட்டு சென்றார்கள். மறுநாள் மறுபடியும் எரியவில்லை. என்ன வென்று விசாரித்தால், முதல் நாள் போட்ட லைட்டை எடுத்து விட்டு வேறு லைட் (ஃப்யூஸ் ஆனது) போட்டு விட்டுச் சென்று விட்டார்களாம்!

## சொல்லி மாளாத பள்ளி நிலவரங்கள்:

இரண்டரை லட்சம் மாணவ மாணவியர்கார்ப்பரேஷனின் 369 பள்ளிகளில் படிக்கிறார்கள். ஆசிரியர்கள் எண்ணிக்கை 5700. எந்த பள்ளிக்கூடத்துக்குச் சென்றாலும், ஆசிரியர்களின் எண்ணிக்கை குறைவுதான். வேலை பளுவால் அவதிப்படுகிறார்கள். கார்ப்பரேஷன் பள்ளியின் தரத்தைப் பற்றியோ, கேட்கவே வேண்டாம். (நுங்கம்பாக்கம் பள்ளி மட்டும் இதற்கு விதி விலக்கு) ஆசிரியர் ஒருவர் சொல்லுகிறார்: "யார் யாரை சார் கேட்பது? எல்லோரும் இந்நாட்டு மன்னர்கள்!" மக்கு மன்னர்களின் உற்பத்திசாலைகளாக விளங்குகின்றன மாநகராட்சிப் பள்ளிகள். எஸ்.எஸ்.எல்.ஸி. பரீட்சையில், ஒருவர் கூடத்தேறாத பள்ளிகளின் லிஸ்டில் மாநகராட்சி பள்ளிகள் பல தவறாமல் இடம்பெறுகின்றன.

பள்ளிக் கூடக் கட்டிடங்கள் ஒழுங்காகப் பராமரிக்கப்படுவதில்லை. வால்டாக்ஸ் சாலையில் ஒருபள்ளியில் கடந்த நான்கு வருடங்களாக மேற்கூரை போடாமலேயே ஷெட்டுகளில்வகுப்புகள் நடத்தப்படுகின்றன. ஆனால் சத்துணவுக் கூடம் மட்டும் அழகாகக் கட்டி முடித்து விட்டார்கள். 'கல்வி வேண்டாம்; சோறு போதும்' என்று முடிவு கட்டிவிட்டார்களோ என்னவோ!

சில காலத்துக்கு முன் ஒரு பத்திரிகையில் மாநகராட்சியின் பள்ளிகளில் இரவுகளில் முறைகேடான வேலைகள் நடக்கின்றன என்று செய்தி வந்தது. "அதைத் தடுப்பதற்கு என்ன நடவடிக்கை எடுத்தீர்கள்?" என்றுகேட்டதற்கு ஒரு அதிகாரி சொன்னார்: "இப்போதும்தான் நடக்கின்றன. ஆனால் ஒரு சின்ன வித்தியாசம். பள்ளிக் கூட அறைகளை உபயோகப் படுத்துவதற்குப் பணத்தைக் கொடுத்து விடுகிறார்கள்!"

## பசுமையை விரும்பாத பார்க்குகள்:

ஒன்று இரண்டு பார்க்குகளைத் தவிர மற்ற பார்க்குகளை மாநகராட்சி கண்டு கொள்வதேயில்லை. நிறைய பார்க்குகளில் தண்ணீர் வசதியே இல்லை. நன்றாக இருக்கும் ஒன்றிரண்டு பார்க்குகளில் இருந்து

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

மனைவி: "என்னங்க எப்பவும் அஞ்சு மணிக்கெல்லாம் வீட்டுக்கு வந்திடுவீங்களே, இன்னைக்கி ஏன் இவ்வளவு லேட்டு?"

கணவன்: "இன்னைக்கி கொஞ்சம் அசந்து தூங்கிட்டேன்டி..."

—வே. தனபால்ராஜ்.



செடிகள் அதிகாரிகளின் வீட்டுத் தோட்டத்துக்குச் செல்கின்றன. இரவு நேரங்களில் பார்க்குகளில் வேறு விவகாரங்கள் நடக்கின்றன.

75 விளையாட்டு மைதானங்கள் உள்ளன. ஆனால் பெரும்பாலான விளையாட்டு மைதானங்களை விளையாட்டுத் தனமாகவே வைத்துக் கொண்டிருக்கிறது மாநகராட்சி. பெரும்பாலான மைதானங்களில் குடிசைகள் போடப்பட்டுள்ளன. இத்தனைக்கும், பார்க்குகளையும் விளையாட்டு மைதானங்களையும் கவனிக்க என்று ஒரு உதவி கமிஷனர் இருக்கிறாராம். (அவர் என்னதான் செய்கிறாரோ?)

## சொத்து சேர்க்க உதவும் 'சொத்து வரி':

கார்ப்பரேஷனின் வருவாய்களில் முக்கியமானது சொத்துவரி. இதை வசூலிப்பதில் உள்ள முறைகேடுகளோ ஏராளம். கொஞ்சம் தள்ளினால் போதும் (பணத்தை தான்) உங்கள் வீட்டின் மதிப்பைக் குறைவாக்கிச் சொத்து வரியையும் குறைத்து விடுவார் மதிப்பீட்டாளர். இருக்கிற கட்டிடத்தைத் திருத்தி அமைத்தாலோ அல்லது புதிய கட்டிடங்கள் எழுப்பினாலோ பிளான் அங்கீகாரத்துக்குப் போகவேண்டும். இதிலெல்லாம் பணம் கீழ் மட்டத்திலிருந்து மேல் வரை பாய்கிறது.

மாநகராட்சி கட்டிடத்தை ஒரு ரவுண்டு அடித்த போது ஆங்காங்கே பலர் வேலை செய்யாமல், கதை பேசிக் கொண்டு நிற்பதைக் கண்டோம். ஒரு இடத்தில் 'வேலை காலி இல்லை' என்று போடப்பட்டிருந்தது. அதை அழித்து விட்டு, "இங்கிருப்பவர்களுக்கே வேலை இல்லை" என்று மாற்றி எழுதினால் நன்றாக இருக்கும்.

ஒரு அதிகாரியிடம் 'ஒரு சந்தேகம் சற்று விளக்க முடியுமா?' 'மிகவும் அவசரம்' என்றோம். 'சரி பதினைந்து நாட்கள் கழித்துப் பாருங்கள்' என்றார். 'சார் அவசரம்' என்றதும், 'அது

நாள் பதினைந்து நாள்; இல்லையெனில் பல மாதங்கள் ஆகும்' என்றுரேபார்க்கலாம்.

## மஸ்டர் ரோல்

இதைப் பற்றி எழுத ஆரம்பித்தால் ஒரு இலவச இணைப்பே தேவைப்படும். கார்ப்பரேஷனின் பலவட்ட அலுவலகங்களில் காலையில் 'ஆஜர்' சொல்லி விட்டுப் போகும் ஊழியர்கள், அப்புறம் எங்கு தான் செல்கிறார்களென்று ஆராய்ந்தால் மக்களின் பணம் இப்படி விரயமாகிறதே என்று வயிறெரியும்.

(ஒரு சின்ன ரகசியம்: சென்ற முறை கார்ப்பரேஷன் மஸ்டர் ரோல் விவகாரத்தில் சம்பந்தப்பட்ட சிலர் தற்போது பதவி உயர்வுடன் மாநகராட்சியில் பணிபுரிகிறார்களாம்.)

## நிர்வாக சீர்கேடுகளுக்குக் காரணங்கள்:

சென்னை நகரில் 150 வார்டுகள். மாநகராட்சி 30.11.73 அன்று கலைக்கப்பட்டது. அதற்கப்புறம் ஆட்சி அதிகாரிகளிடத்தில் தான். கவுன்சில் ஹால் கூரை ஓட்டடையால் ஆக்கிரமிக்கப்பட்டிருக்கிறது. இருக்கைகளைத் தட்டினால் தும்மல் வருமளவுக்குத் தூசி கிளம்புகிறது.

கார்ப்பரேஷனின் நிர்வாக சீர்கேடுகளுக்குமுக்கியமான காரணம் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் பிரதிநிதிகள் இல்லாதது தான் என்கிறார் பழைய துணைமேயரும் தற்போதைய எம்.எல்.ஏ.வுமான திரு. என். வி. என். சோமு. அவர் கூறினார்: ''நான் கவுன்சிலராக இருந்த போது காலையில் எழுந்தவுடன் என்னுடைய வட்டத்தில் 'வாக்' போய் விட்டு வருவேன். தெருவில் உள்ள மக்கள் குறைகளைச் சொல்வார்கள். அதை உடனே நிவர்த்தி செய்ய அதிகாரிகளிடம் சொல்லுவோம். அவர்களும் பயந்து நிவர்த்தி செய்வார்கள். இப்போது எம். எல். ஏக்கள் சொன்னாலே யாரும் கவனிப்பது கிடையாது. கவுன்சிலர்கள் இல்லாத சூழ்நிலையில், மக்கள் எம். எல். ஏக்களிடம் தான் வந்து குறைகளைச் சொல்கிறார்கள். ஆனால் மந்திரி குழந்தைவேலுவோ, 'குறைகேட்கும் நாள்' என்று என் தொகுதியிலேயே வந்து முகாமிடுகிறார். தொகுதி எம். எல். ஏ. ஆன எனக்கு ஒரு தகவலும் தருவதில்லை. நிலைமை இப்படி இருந்தால் அதிகாரிகள் எப்படி எம். எல். ஏக்களை மதிப்பார்கள்?

கவுன்சில் இருந்தால், அக்கவுண்ட்ஸ் கமிட்டி, ஒர்க்ஸ் கமிட்டி, டெண்டர் கமிட்டி என்று பல்வேறு கமிட்டிகள் இருக்கும். இதனால் ஊழல்கள் குறையப் பெருமளவு வாய்ப்புண்டு. மேலும் எங்கெங்கு வேலை நடக்கிறதோ அங்கேசென்று மேற்பார்வையிட கவுன்சிலர்களைக் கொண்ட கமிட்டி ஒன்று இருக்கும். இதனால் அதிகாரிகளும் ஒப்பந்தக்காரர்களும் பயந்து கொண்டு வேலை செய்தார்கள். கவுன்சிலர்களும், அடுத்த தேர்தலில் மக்களைச் சந்திக்க வேண்டுமே என்ற பயத்தில் தம் கடமைகளைச் செய்தார்கள். இந்த அரசு தான் தேர்தல் நடத்தவே அஞ்சுகிறதே!'

## வரவு - செலவு

மக்களுக்கு மாநகராட்சி ஏன் அதிகமாக நன்மை செய்ய முடியவில்லை? பணம் பற்றாக் குறைதான் என்கிறார் எம். ஜி. ஆர். வருட வருமானம் 32கோடி. சம்பளமாகவே 18 கோடி செலவாகிறது. மீதியிருக்கும் பணத்தில் என்ன செய்ய? தேவைக்கு அதிகமாக இருக்கும் ஊழியர்களை வீட்டுக்கு அனுப்ப முடியாது. ஆனால் வரிவசூலிக்கும் விதத்தில் உள்ள முறைகேடுகளை நீக்கி வருவாயைப் பெருக்கலாமே! முக்கியமான பணிகளில் இருக்கும் ஊழியர்கள் கடமைகளை ஒழுங்காகச்செய்கிறார்களா என்று கவனிக்கத் தேர்தல் நடக்கும் வரையில் பொது மக்கள் கமிட்டி ஒன்றை நியமிக்கலாமே!

கட்டுரை:

பிரியன் - மௌலி

படங்கள்: சேகர்; சுபா



அஞ்சலி

# வியப்பில் ஆழ்த்திய விந்தை மனிதர்



கல்லிடைக் குறிச்சியிலிருந்து காலணா இல்லாமல் சென்னை வந்து, ஒரு சைக்கிள் கடையில் ஃபிட்டராகப் பணியாற்ற ஆரம்பித்து, படிப்படியாக வெகு சீக்கிரத்தில் வாழ்க்கையில் உயர்ந்த திரு. **ஈசுவர அய்யர்**, அண்மையில் தமது 75—வது வயதில் மறைந்த போது ஒரு தொழில் – வர்த்தக சாம்ராஜ்ஜியத்தின் அதிபதியாகத் திகழ்ந்தார். இந்த அதிசய மனிதருடன் நாற்பதாண்டுக் காலமாக நெருங்கிய தொடர்பு கொண்டிருந்து, அவரது ஈசன் இன்ஜினீரிங் நிறுவனத்தில் நிதித்துறை இயக்குனராக விளங்கிய திரு. **ராமகிருஷ்ணன்** கூறுகிறார்:

ஈசுவர அய்யர் ஒரு விசித்திர மனிதர். பள்ளிக்கூடம் போனதோடு சரி. பெரிய பரீட்சை எல்லாம் எழுதிப் பட்டம் வாங்கின இல்லை. ஆனால் மிகச்சிறந்த பொருளாதார மேதையை விட சாமர்த்திய மிக்கவராகத் திகழ்ந்தார்.

பொதுவாக கோப்புகளை அவர் பார்ப்பதில்லை. அவற்றை நுனுகி, நுனுகி பார்த்து நேரத்தை வீணடிக்க மாட்டார். நம்பகமானவர்களை பார்க்கச் செய்து அதிலுள்ள விவரங்களை விவாதிக்கச் சொல்வார். எப்படி நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று தீர்ப்பு வழங்கி விடுவார். காரியங்கள் மளமளவென்று நடக்கும்.

இப்போதெல்லாம் 'டிஃபர்ட் பேமண்ட்' என்ற முறை வெகு பிரபலமாக உள்ளது. இதன்படி அயல் நாட்டு நிறுவனங்கள் இயந்திரங்களையும், மற்ற சாதனங்களையும் இங்குள்ள தொழிலதிபருக்கு பாங்கு காரண்டி பெற்றுக்கொண்டு அனுப்பிவிடும். அந்த இயந்திரங்களுக்கான கிரயத்தை இவர் எட்டு அல்லது பத்து ஆண்டுகளில் வட்டியுடன் தவணை முறையில் அனுப்பி வைக்கலாம். அந்த இயந்திரங்களைப்பயன்படுத்தி உற்பத்தி செய்து பணம் பண்ணியே கிரயத்தைத் தந்து விடலாம். இந்த முறையை 1948—50-ல் பிரபலப்படுத்தியவரே ஈசுவர அய்யர் தான். இவரைப் பொறுத்த மட்டில் ஒரு கிழக்கு ஜெர்மானிய நிறுவனம் பாங்கு காரண்டி கூட இல்லாமல் இவர் கேட்ட இயந்திர சாதனங்களை அனுப்பி வைத்து விட்டது! அந்த அளவுக்குத் தொழில்துறையில் அனைவரது மதிப்புக்கும் பாத்திரமானவர்.

ஒருசமயம் அவரும், நானும் எச். டி. ஸ்விச்கிர் என்ற அயல்நாட்டு நிறுவனத்துடன் ஒரு தொழில் ஒப்பந்தம் செய்து கொள்ள லண்டன் சென்றிருந்தோம். முதல் நாள் அந்த நிறுவனத்தின் தலைவர் பிரௌனிடம் ஒப்பந்த ஷரத்துக்களைப் பற்றிப் பேசினோம். மறுநாள் ஒப்பந்தத்தைத் தயாரித்துத் தருவதாக ஈசுவரன் கூறினார். திரு. பிரௌன் சிரித்துக் கொண்டே வழியனுப்பினார். ஏனென்றால் சாதாரணமாக ஒப்பந்தம் தயாரிப்பதென்றால் சட்ட ஆலோசகர்களை அழைத்து அவர்களிடம் பொறுப்பை விடுவார்கள். ஒரு வாரம் பத்து நாள் என்று இழுத்தடிக்கும். ஆனால் ஈசுவரன் அன்றிரவே தமது அறையில் அமர்ந்து தயாரித்து மறுநாள் காலை திரு. பிரௌனிடம் கையெழுத்துக்குச் சமர்ப்பித்தார். ஒரு திருத்தத்துக்குக் கூட இடமில்லை. அசந்து போய் விட்டார் பிரௌன்.

சைக்கிள் கடையில் ஃபிட்டராகச் சேர்ந்தவர்; பிறகு சைக்கிள் வியாபாரம் பண்ணினார். ஹெர்குலஸ் ராயல் முதலிய சைக்கிள்களுக்கு ஏஜென்ஸி எடுத்தார். இன்று தமிழகத்தில் கிராமங்கள்தோறும் சைக்கிள்கள் காணப்படுகின்றன என்றால் அதற்கு அன்று அவர் சைக்கிள்களைக் கிராமங்களிலெல்லாம் பிரபலப்படுத்தி அஸ்திவாரமிட்டது ஒரு காரணம்.

தொழிலாளரிடம் எளிமையாகப் பழகுவார் ஈசுவரன். சோம்பல் அவருக்குப் பிடிக்காதது. நல்ல நாட்களில் லீவு விடக் கூடாது. உழைக்க வேண்டும் என்பார். ஜனவரி முதல்தேதி, ஆயுத பூஜை போன்ற நாட்களில் அவர் நிறுவனத்தில் வேலை நடக்கும்! வீட்டிலே பெரிய நூலகம் வைத்திருந்து பல மொழிகள் கற்றார். தொழில் நுட்ப நூல்களை ஏராளமாய்ப் படித்தார்.

வாழ்க்கையில் எவ்வளவோ உயர்ந்து விட்ட போதிலும் அனைவரிடமும் ஒரே மாதிரிதான் பழகுவார். ஒருசமயம் ஒருகல்யாணத்தில் கல்லிடைக்குறிச்சியிலிருந்து வந்திருந்த பால்ய சிநேகிதர் ஒருவர் இவரைப் பார்த்து விட்டுத் தயங்கித் தயங்கி நெருங்கி ''நீங்க..'' என்று ஆரம்பித்தார். ஈசுவரன் அவரை அப்படியே கட்டி அணைத்துக்கொண்டு, '' 'நீ'ன்னே கூப்பிடு;பரவாயில்லை!'' என்றார்!

பேட்டி: **சிக்கி**

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

புதியது

பால் அடங்கிய
ஃபாரெக்ஸ்
திட உணவு

# அதிக சுவையானது
# அதிக முழுமையானது




**நீங்கள் பாசத்துடன் ஊட்டும் ஒவ்வொரு கவளமும் உங்கள் பாப்பாவின் வளர்ச்சிக்குச் சிறந்ததாகும்.**

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. இதைக் கலப்பது எளிது. பாப்பாவுக்கு ஊட்டுவதும் எளிது.

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. பாப்பாவின் வளர்ச்சிக்கு இன்றியமையாத புரதம் நிரம்பியது. மிக ஆரோக்கியமான இரத்தத்திற்குக் கூடுதல் இரும்புச்சத்து கொண்டது. உறுதியான பற்களையும் எலும்புகளையும் பெற சரியான விகிதத்தில் கால்ஷியமும் ஃபாஸ்ஃபரஸும் அடங்கியது. பாப்பாவின் மென்மையான ஜீரணசக்திக்கென முன்கூட்டிப் பக்குவம் செய்தது.

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. ஒவ்வொரு கவளத்திலும் அதிக முழுமையான திட உணவு.

CLARION/B/GX/3/203 TAM